"ஜீவா" நீட்டிய சமூக சித்திரம்

## இவ்வுலகைத் திரும்பிப்பாரேன்?

செல்வக் குடும்பத்தில் பிறந்து வளர்ந்து சீமைப்படிப்பு படித்து நவ நாகரிக வலையில் சிக்கிச் சீர்கேடுற்று வாழ்க்கையில் ஏற்பட்ட பல கஷ்ட நஷ்டங்களால் உலகையே வெறுத்துச் சென்ற ஒரு பெண்மணியின் சுய சரிதம் உள்ளத்தைக் கவரும் வகையில் வரையப்பட்டிருக்கிறது.

இதன் விலை ரூ. **1.**

ஸ்ரீமான். ஆரணி. குப்புசாமி முதலியார் எழுதியது

## வீரநாதன் அல்லது ஓர் மலைநாட்டுத் துப்பறிபவன்

இதில் சம்பந்தப்படும் துப்பறிபவன் செயல்களும், குறவாளிகள் செய்கைகளும், ஸ்திரீகளின் நடக்கைகளும் மிக்க அதிசயம் பொருந்தியவைகளாகவே யிருக்கும். விலை அணா 12.

## கிருஷ்ணஸிங் அல்லது துப்பறியும் சீடன்

துப்பறியும் இரகசியங்களும், தந்திர சாமர்த்தியங்களும் வீரதீராதி செயல்களும், உலகில் பல படுமோசப் படுகுழியிலிருந்து தப்புவதற்கான புத்தி மதிகளும், கெடுவான் கேடு நினைப்பான் என்பதற்கிணங்க நீதிமதியோடு கூடிய பல அத்தாட்சிகளும், இன்னும் பல இனிய அரிய போதனைகளும் அடங்கியது. விலை அணா 14.

---

## எமது சொந்தப் பிரசுரங்கள்

| | ரூ. | அ. |
|---|---|---|
| சீமந்தனி ... | 0 | 8 |
| மதிமோச விளக்கம் ... | 1 | 0 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| தசாவதார மகிமை ... | 0 | 6 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| வீரத்தன்மையுள்ள ஹிந்து மாது சிரோமணிகள் ... | 0 | 10 |
| தொல்சி தோயின் இருசிறு கதைகள் ... | 0 | 8 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| ஸ்ரீ கிருஷ்ணன் தூது ... | 0 | 8 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| சண்டோபாக்கியானம் ... | 0 | 6 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| சத்தியவசனி ... | 0 | 4 |
| அங்கதன் ... | 0 | 4 |
| மணவாளன் ... | 0 | 3 |
| கருணாகரரும் சத்திய சீலரும் | 0 | 8 |
| நாலு மந்திரி கதை ... | 0 | 4 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| நான்கு கோடி ... | 0 | 4 |
| பரசுராமன் ... | 0 | 3 |
| தக்கன் ... | 0 | 6 |
| நரிவிருத்தம் ... | 0 | 4 |
| மங்களேசுவரன் என்னும் பத்திராயு ... | 0 | 8 |
| சூரபத்மன் ... | 0 | 12 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| செய்யுட் பாடத்திரட்டு ... | 0 | 4 |
| லார்ட் கிளைவ் சரித்திரம் ... | 0 | 12 |
| தசக்கிரீவன் ... | 0 | 14 |
| உதயணன் ... | 0 | 8 |
| விமலன் ... | 0 | 4 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| மும்பெருந்தாசர் ... | 0 | 10 |
| ரிப்பன் பிரபு ... | 0 | 10 |
| அபிரகாம் லிங்கன் ... | 0 | 12 |
| பாரத வீரர்கள் ... | 0 | 8 |
| தாமோதரம் பிள்ளை சரித்திரம் ... | 1 | 0 |
| கெட்டாஜி ... | 0 | 10 |
| விஜயத்திவிட்டார் ... | 0 | 11 |
| சங்ககாலத்துப் புலவர்கள் ... | 0 | 10 |

ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. **167**, மதராஸ்.




"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு."—திருவள்ளுவர்.


| | | |
|---|---|---|
| தொகுதி 30 | தாரண௵ மார்கழி௴ ௧௳<br>1944௵ டிசம்பர்௴ 15௳ | பகுதி 6 |


## உள்ளுறை.


| எண். | பொருள். | பக்கம். |
|---|---|---|
| 1. | கடவுள் வணக்கம் | 292 |
| 2. | அடிப்படைக் கல்வியின் அவசியம் | 293 |
| 3. | ரேகை சாஸ்திரம் | 298 |
| 4. | பழிக்குப் பழி | 301 |
| 5. | ஜ்யோதிஷ பல ரகஸ்யம் | 303 |
| 6. | பிள்ளையாரும் சனீஸ்வர பகவானும் | 305 |
| 7. | வானத்தில் கண்ட ஜோதி | 308 |
| 8. | ஆல்பெர்ட் அயின்ஸ்டீன் | 314 |
| 9. | ஏமாற்றம் | 318 |
| 10. | திருமலைக் குமார சுவாமி | 323 |
| 11. | தெய்வ தரிசனம் | 325 |
| 12. | பஞ்சம் யாருக்கு? | 328 |
| 13. | ஜவுளிக்கடை ஜம்புலிங்கம் | 331 |
| 14. | மாந்தர் நிலை | 336 |
| 15. | என் தாய் நாடே (கவிதை) | 338 |
| 16. | செல்வர்களுக்கு | 339 |
| 17. | விஞ்ஞானமும் மருத்துவமும் | 341 |
| 18. | சிலப்பதிகாரம் பெருங்காவியமா? | 345 |
| 19. | தேவதேவி | 347 |
| 20. | நிராயன சுத்த ஸ்புடம் | 352 |
| 21. | பஞ்சாங்கம் | 353 |




## கடவுள் வணக்கம்.

ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும்
சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே! வளருதியோ? வன்செவியோ நின்செவிதான்?
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்மறந்து
போதுஆர் அமளியின்மேல் நின்றும் புரண்டும் இங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள்; என்னே! என்னே!
ஈதேஎம் தோழி பரிசுஏல்ஓர்; எம்பாவாய்! (1)

ஒள்நித் திலநகையாய்! இன்னம் புலர்ந்தின்றோ?
வண்ணக் கிளிமொழியார் எல்லாரும் வந்தாரோ?
எண்ணிக்கொடு உள்ளவா சொல்லுகோம்; அவ்வளவும்
கண்ணைத் துயின்றுஅவமே காலத்தைப் போக்காதே!
விண்ணுக்கு ஒருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக்கு இனியானைப் பாடிக் கசிந்துஉள்ளம்
உள்நெக்கு நின்றுஉருக யா(ம்)மாட்டோ(ம்) நீயேவந்து
எண்ணிக் குறையில் துயில்ஏல்ஓர்; எம்பாவாய்! (2)

முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே!
பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும்அப் பெற்றியனே!
உன்னைப் பிரானாகப் பெற்றஉன் சீர்அடியோம்
உன்அடியார் தாள்பணிவோம்; ஆங்குஅவர்க்கே பாங்குஆவோம்.
அன்னவரே எம்கணவர் ஆவார்; அவர்உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்.
இன்ன வகையே எமக்குஎம்கோன் நல்குதியேல்
என்ன குறையும் இலோம்ஏல்ஓர்; எம்பாவாய். (3)

போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்!
போற்றி அருளுகநின் அந்தமாம் செந்தளிர்கள்!
போற்றிஎல் லாஉயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்!
போற்றி!எல் லாஉயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்!
போற்றிஎல் லாஉயிர்க்கும் ஈறாம் இணையடிகள்!
போற்றிமால் நான்முகனும் காணாத புண்டரிகம்!
போற்றியாம் உய்யஆட் கொண்டுஅருளும் பொன்மலர்கள்!
போற்றியாம் மார்கழிநீர் ஆடுஏல்ஓர்; எம்பாவாய்! (4)

யாகும். "நமது நாட்டிலுள்ள சமூகங்களுக் கிடையே இருக்கும் வேற்றுமைகளைக் கூடுமானவரை அகற்றவேண்டும். ஒரு பொது சமயம் ஏற்படுத்துவதென்பது முடியாத காரியம். பல வேறு மதங்களின் தத்துவ ஒற்றுமையை எல்லோரும் உணரச் செய்யலாம். இதை நமது கடமையாகச் செய்யவேண்டும்" என்று டாக்டர் இக்பால் ஓரியன் குர்து காசி இந்து சர்வ கலாசாலை பட்டமளிப்பு விழா பிரசங்கத்தில் குறிப்பிட்டுப் பேசியிருப்பதும், "உண்மை ஆர்வத்துடனும் ஊக்கத்துடனும் தேசத்துக்கு உழைப்பதென்ற உறுதியுடன் புதிய பட்டதாரிகள் உலக வாழ்வில் நுழைய வேண்டும். மக்களை வேறுவேறு பகுக்கும் சிறுமைப்பட்ட வேறுபாடுகளையும் மறந்து இந்நாட்டில் வாழும் மக்கள் அனைவரையும் தமக்குரிய சகோதரராகக் கொள்ளவேண்டும்" என்று ஸர். மீர்ஜா இஸ்மாயில் ஆக்ரா சர்வ கலாசாலைப் பட்டமளிப்பு விழா பிரசங்கத்தில் பேசியிருப்பதும், ஸர். இராதாகிருஷ்ணனின் மேற்குறித்த அபிப்பிராயத்துக்கு ஆக்கந் தருவதாக இருக்கிறது.

இப்படிப்பட்ட பொதுநல சேவா வுணர்ச்சியும் சமூக நல் வாழ்வும் ஏற்படச் செய்யவேண்டுமானால், இன்றைய கல்வி முறை மாற்றி யமைக்கப் படவேண்டியது அவசியம். இதற்கு வழி காட்டக்கூடிய பெரியார்கள் பலருள் முக்கியமானவர் மகாத்மா காந்தி என்று ஸர். இராதாகிருஷ்ணன் கூறுவதை யாவரும் ஒப்புக்கொள்வர். அவர் தற்காலக் கல்விமுறையை மாற்றியமைக்க ஏற்கனவே ஒரு திட்டத்தைத் (வார்த்தா கல்வித்திட்டம்) தயாரித்துக் கொடுத்திருக்கிறார். இப்போது அகில இந்திய அடிப்படைக் கல்விப் பயிற்சி முகாமை ஸேவா கிராமத்தில் தொடங்கி வைத்திருக்கிறார். இம்முகாம் மூலமாக அவர் வகுத்துக் கொடுத்திருக்கும் கல்வி முறைக்கு 'நயாதளம்' அதாவது 'புதிய கல்வி', என்று பெயரிட்டிருக்கிறார். இக்கல்வி முறைக்கு வயதுவரம்பு கிடையாதாம். வாணாள் முழுதுக்கும் கிராமக் கைத் தொழில்கள் வாயிலாகக் கல்வி யளிக்கப் படுவதுதான் இப்புதிய கல்விமுறையின் நோக்கமாம். "பிறந்தது முதல் இறப்பது வரை ஆண், பெண் இருபாலருக்கும் அடிப்படையான கல்வி யளிக்கத் திறமை யுடையவரே உண்மையான ஆசிரியராவர்" என்று காந்தியடிகள் இக்கல்வி முறையைப் போதிக்க முற்படுபவர்களுக்கு லட்சணம் கூறியிருக்கிறார். இத்தகைய சிறந்த கல்விமுறை அறியாமை இருளில் ஆழ்ந்திருக்கும் இந்திய மக்களுக்கு அறிவுச் சுடரைக் கொளுத்தும் என்று நாம் திடமாக நம்புகிறோம்.

---

# ரேகை சாஸ்திரம்

G. B. L.



## ஆயுளை நிர்ணயிக்கும் விதம்

ஒருவருடைய கையைப் பார்த்து பலன் சொல்ல நேரிட்டால் முதலில் ஆயுள் ரேகையைக் கவனிக்கவேண்டும்.

உதாரணமாக ஒரு குழந்தை பிறந்த வுடன் ஓர் ஜோதிடரிடம் சென்றால், அவர் முதலில் ஆயுள் பாவத்தை கவனித்த பிறகே மற்ற பாவங்களை நிர்ணயிப்பார். ஏனென்றால், அக் குழந்தை அற்ப ஆயுளுடைய தாக இருந்து, அக் குழந்தைக்கு 50-ம் வயதில் அதிருஷ்ட முண்டாவதாக இருந்தால், மேற்படி அதிருஷ்டம் வரும் வரை அக் குழந்தைக்கு ஆயுள் இல்லாததால் மேற்படி அதிருஷ்டம் பயனற்ற தாகும்.

அவ்வாறே ரேகை சாஸ்திரத்திலும் ஆயுளை நிர்ணயித்த பிறகே மற்ற ரேகைகளின் பலன்களை நிர்ணயிக்க வேண்டும்.

ரேகை சாஸ்திரத்தை இயற்றிய பிரகலாதனும், கர்க மகரிஷியும், வராஹ மிஹிர மகரிஷியும் நம் சரீரத்தின் மூலம் ஆயுளை நிர்ணயிக்க மூன்று விதங்களைக் கண்டு பிடித்திருக்கிறார்கள்.

1. மணிக்கட்டு ரேகைகளைக் கொண்டு ஆயுளை நிர்ணயித்தல்.

2. ஒருவர் மேல் நோக்கி திருஷ்டியை (பார்வையை)செலுத்தினார் களானால் அவர்கள் நெற்றியில் எவ்வளவு கோடுகள் தென்படுகின்றதோ, அந்தக் கோடுகள் ஒவ்வொன்றிற்கும் 20 வயதென்று கணக்கிட்டு ஆயுளை நிர்ணயித்தல்.

3. ஆயுள் ரேகையால் ஆயுளை நிர்ணயித்தல்.

நாமும் மேற்படி மூன்று விதங்களைக் கொண்டு ஆயுளை நிர்ணயித்தால் தவறுதல் நேரிடாது.

1. மணிக்கட்டு ரேகைகளைக் கொண்டு ஆயுளை நிர்ணயிக்கும் விதம் ஆவணிமாத இதழில் 62ம் பக்கத்தில் பிரசுரம் செய்யப்பட்டிருக்கிறது.

2. நெற்றியில் ஏற்படும் கோடுகளைக் கொண்டு ஆயுளை நிர்ணயிக்கும் விதத்தை மேலே அறிவித்திருக்கிறேன்.

3. ஆயுள் ரேகையைக் குறித்து இங்கு ஆராய்வோம் :

## ஆயுள் ரேகை



1. ஆயுள் ரேகை மெல்லியதாகவும், சிவப்பு வர்ணமுடைய தாகவும் ஆழமின்றி (முதல் படத்தில் இருப்பதைப்போல்) ஆள் காட்டி விரலுக்கும், பெரிய விரலுக்கும் நடுவில் சென்றிருந்தால், பூர்ண ஆயுளுடையவராக இருப்பார்கள். இவர்கள் யாதொரு வியாதியு மின்றி தேகாரோக்கியத்துடன் எப்பொழுதும் புன்னகை தவழும் முகத்துடன் காணப் படுவார்கள். எக்காரியத்திலும் தைரியமாகப் பிரவேசிப்பார்கள். தாங்கள் பிரவேசித்த காரியம் ஜய மடைந்தாலும், அப ஜயமடைந்தாலும், அதைப் பொறுமையுடன் சகித்துக் கொள்ளும் ஆற்றலுள்ளவராக இருப்பார்கள்.

குரு ஆதிக்கமும் சேர்ந்திருக்குமாயின், பிறர் கஷ்டங்களைக் கண்டு சிறிதும் சகிக்க மாட்டார்கள். தங்களாலியன்ற உதவியை அவர்களுக்குச் செய்வதில் பின் வாங்க மாட்டார்கள். மித்திரர்களுக்குத் தங்கள் பிராணனையும் கொடுத்து காப்பாற்றும் குணமுடையவர்களாய் இருப்பார்கள். இவர்களை நம்பி எக்காரியத்தில் பிரவேசித்தாலும் ஜயமுண்டாகும்.

2. சனி மேட்டிற்கும், சூரிய மேட்டிற்கும் இடைவரை ஆயுள் ரேகை சென்றிருந்தால், 50 வயதென்று ஆயுளை நிர்ணயிக்க வேண்டும்.

இவ்வாறே ஆயுள்ரேகை எவ்வளவு தூரம் செல்கின்றதோ அவ்வளவு ஆயுளுடையவரென்றுநிர்ணயிக்கவேண்டும்.





3. ஆயுள் ரேகையில் கிளைகள் தென்படின், கிளைகள் தென்பட்ட வயதில் வியாதி உண்டாவதைக் குறிக்கும். (படம் 3) கிளைகள் எவ்வளவு தூரம் சென்றிருக்கிறதோ அவ்வளவு வயது வரை வியாதி நீடித்திருக்கும். கிளைகள் ஆழமாகப் பதிந்திருந்தால் கடுமையான வியாதி பீடிக்கும்.

உதாரணமாக் ஒருவர் கையில் இருக்க வேண்டிய ஆயுள் ரேகையை 8 பாகங்களாகப் பிரித்தால் பாகம் ஒன்றுக்கு $12\frac{1}{2}$ வயதாகிறது. ஆயுள் ரேகை 6 பாகம் வரை வியாபித்திருந்தால் 75 வருஷம் வயதாகிறது. 5ம் பாகத்தில் மேற்படி ஆயுள் ரேகையிலிருந்து சிறு கிளைகள் பிரிந்திருந்து $\frac{1}{4}$ அங்குலம் சென்று மறைந்துவிட்டால் $62\frac{1}{2}$ வயதில் ஓர் வியாதி உண்டாகி சுமார் $68\frac{3}{4}$ வயது வரை அவ்வியாதி நீடித்திருந்து பிறகு குணமாகி 75ம் வயதில் மரண முண்டாவதைக் குறிக்கும். இவ்வாறே ஆயுளையும் வியாதி வரும் காலத்தையும், வியாதி நீங்கும் காலத்தையும், ஆராய்ந்து அறிய வேண்டும்.

4. ஆயுள் ரேகை இரண்டாகப் பிரிந்து மறுபடியும் ஒன்ருகச் சேருமாயின், ஆயுள் ரேகை பிரியும் காலம் முதற் கொண்டு மறுபடியும் சேரும் காலம் வரை பலஹீன முண்டாவதையும், மஹோ வியாதி உண்டாவதையும் அறிவிக்கும் (படம் 4)





5. ஆயுள் ரேகை விட்டு விட்டுச் சென்றிருக்குமாயின் அவ்வப்பொழுது ஆபத்துகள் ஏற்படுவதைக் குறிக்கும். (படம் 5) துண்டுகளின் இடையில் எவ்வளவு தூரம் விட்டிருக்கிறதோ அவ்வளவு வயது வரை ஆபத்துகள் நீங்காமல் இருப்பதை ஊர்ஜிதப் படுத்தும்.

விபத்துகள் ஏற்படும் காலத்தையும், நீங்கும் காலத்தையும் முன் அறிவித்தபடியே அறிய வேண்டும்.

(தொடரும்.)

நயவஞ்சகம், பேடித்தனம் என்று கருதப்படுகிறது. ஆனால் அந்த அபிப்பிராயத்தை எல்லாச் சந்தர்ப்பங்களிலும் ஒப்புக் கொள்ள முடியாது. எதிரி மகாபாதகனாக இருக்கும்போது கையாளும் நயவஞ்சகத்தை விட சாமர்த்தியமும், ஆண்மையும் நிறைந்த வீரச்செயல் வேறொன்றிருக்க முடியாது என்ற கருத்தை விளக்குகிறது இந்தக் கதை.

# பழிக்குப் பழி



வீ. செல்வராஜ்



கஜினியின் பரிவாரம் பாலைவனத்தின் வழியாகச் சென்று கொண்டிருந்தது. சோமநாதபுரம் கோயிலைக் கொள்ளையடித்த பெருமையுடன் தான் சென்று கொண்டிருக்கிறது. முன்னே ஒரு ஹிந்து வீரன் வழிகாட்டிச் செல்கின்றான். சோமநாதபுரம் முன்னோர்கள் விட்டுச்சென்ற உடைமை. இந்தியக்கலையின் சின்னம். அதை இடித்தான்—கொள்ளையிட்டான் கஜினி. அவனுக்கு வழிகாட்ட இசைந்தான் இந்த வீரன்! என்ன தேசத்துரோகம்!

நல்ல உச்சிவேளை. சூரியன் தன் முழுச்சக்தியையும் உபயோகிக்கிறான். கொள்ளைக் கூட்டமான இப்பரிவாரத்தை எரிப்பவன் போலப் பிரகாசித்துக்கொண்டிருக்கிறான். பொன் தாகம் கொண்ட கஜினி இதையெல்லாம் பொருட்படுத்துவானா என்ன? ஆனால் அவனையும் நீர்த்தாகம் தாக்கியது. நாவரட்சி ஏற்பட்டது. சிறிது தூரத்தில் நீரூற்று இருப்பதாக வழிகாட்டி சொன்னது அவனுக்குச் சிறிது ஆறுதலளித்தது.

எவ்வளவு தூரந்தான் பொறுக்கமுடியும்? திடீரென்று பரிவாரத்தில் குழப்பமேற்பட்டது. கஜினி நாவரட்சியின் மிகுதியால் மயங்கிக் கீழே விழுந்துவிட்டான். பரிவாரம் சட்டென்று நின்றது. ராஜ வைத்தியன் வந்து பார்த்தான். உடனே தண்ணீர் வேண்டும் என்றான். எங்கும் "தண்ணீர், தண்ணீர்" என்ற சொல் ஒலித்தது. சேனைத்தலைவன் முன் வந்தான். ஆனால், அவனால் என்ன செய்யமுடியும்? அவன் அன்னியன். நீரூற்று இருக்கும் இடம் அவனுக்கு எப்படித்தெரியும்? ஆம்; வழிகாட்டி—சுதேசி—அவன் அறிவான். சேனைத்தலைவன் முன் வழிகாட்டி நிறுத்தப்பட்டான். சேனைத்தலைவன் கேட்டான்.

"பக்கத்திலே நீரூற்று இருக்கிறதா?"

"இருக்கிறது" என்றான் வீரன்.

"ஆ, அப்படியா? நல்ல வேளை. உடனே சென்று கொண்டு வரமுடியுமா?"

"அதுதான் முடியாது" என்று கவலையற்று நின்றான் வீரன். சேனைத்தலைவன் ஸ்தம்பித்துவிட்டான். வீரனின் கண்கள் பிரகாசித்தன.

"என்ன இது? இதோ இந்தப் பரிவாரம் எல்லோரையும் வேண்டுமானாலும் உதவிக்குக் கொண்டுபோ. தண்ணீர் கொண்டு வந்தால் அதுவே போதுமானது".

"சேனைத் தலைவரே! அப்படியொன்றும் கஷ்டமில்லை."

"பின் ஏன் தயக்கம்?"

"எனக்கு விருப்பமில்லை"

"என்ன சொல்லுகிறாய்? ஒன்றும் விளங்கவில்லையே?"

"ஏன் விளங்காது! உம் மனச்சாக்ஷியைக் கேட்டுப் பாரும்?" ஈவிரக்கமின்றிக் கொலை புரிவதிலேயே காலங் கழித்த சேனைத் தலைவனுக்கு மனச்சாக்ஷி என்றால் என்ன தெரியப்போகிறது? வழிகாட்டி வீரனின் வார்த்தை ஒன்றும் விளங்கவில்லை. மறுபடியும் கேட்டான்.

"நீ சொல்லுவது ஒன்றும் விளங்கவில்லையே?" வீரனின் கண்கள் சிவந்தன. உணர்ச்சியின் வேகத்தால் அவனின் அதரங்கள் துடித்தன. இதயம் பொங்கி எழுந்தது. உரக்கக் கூறினான்.

"அட பணவெறிகொண்ட பாதகர்களே! உங்களுக்கு எப்படி விளங்கும்? எங்கள் உயிரினும் உயர்ந்த சோமநாதலிங்கத்தைக் காலால் உதைத்த உன் கால்களைக் கேட்டுப் பார்! காலில் விழுந்து கெஞ்சிக் கேட்ட கோவிற் குருக்களை ஈட்டியால் குத்திக் குத்திக் கொன்ற உன் கைகளைக் கேட்டுப்பார்! பொன்னாசைப் பேயா! இந்த அக்கிரமங்களைச் செய்யும்போது,—உன் இருதயத்தின் ஒரு மூலையில்—ஏதோ ஒன்று உன் செய்கைகளைக் கண்டித்ததே அதை இப்போதாவது உணர்கிறாயா? அதுதான் மனச்சாக்ஷி" என்று கர்ஜித்தான் வீரன்.

சேனைத்தலைவனின் கண்கள் கோபத்தால் சிவந்தன. வீரனின் எண்ணங்களை அறிந்துகொண்டான்.

"அப்படியாயின், நீ துரோகம் செய்ய எண்ணினாயா?" என்றான்.

"துரோகமா? நானா துரோகம் செய்கிறேன். இல்லை. ஆனால் பழிக்குப் பழி! இதுதான் பழிக்குப் பழி!" என்று பெருமையுடன் கூறினான் வீரன். இவ்வார்த்தைகளை உச்சரிக்கும்போது வீரனின் இதயம் பூரித்தது. சேனைத்தலைவனை வெறிகொண்டவன் போல் பார்த்தான். வாளை உருவிவிட்டான். வழிகாட்டி இதை எதிர்பார்த்தவன்தானே! "நிறுத்து" என்றான். மிகுந்திருந்த உணர்ச்சியையும் கொட்டிவிட்டான்.

"ஏ கொள்ளைக்காரனே! என்னை உன்னால் தீண்டமுடியாது. என்னை நானே பலியிட்டுக்கொள்ளுகிறேன். என் தாய் நாட்டிற்குச் செய்யவேண்டிய கடமையைச் செய்துவிட்டேன்."

அவ்வளவுதான் தன் இடையிலே ஒளித்துவைத்திருந்த கத்தியை உருவி மேலே தூக்கினான். மறுநிமிடம் கீழே சாய்ந்தான். பாலைவனத்தின் மணலோடு அவன் இரத்தம் தோய்ந்து செக்கச்செவேலென அங்கு கூடியிருந்த எல்லோரையும் பார்த்து ஏளனமாகச் சிரித்தது. சேனைத்தலைவன் அப்படியே சிலைபோல் நின்றான். எல்லோர் முகத்திலும் கிலி பட்டிருந்தது. அதோ அந்த வீரனின் தேகத்தில் மட்டும் கடமையைச் செய்த ஆறுதல் காணப்பட்டது. எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்த சூரியன் மனமிளகியவனாய் வானத்திலே மிதந்து வந்துகொண்டிருந்த முகிற் கூட்டத்திற்குள் மறைந்துகொண்டான்.

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

## சி. பி. ஆனந்தம்



### கவிஞர்கள், கலைஞர்கள், எழுத்தாளர்கள்.

கேந்திரங்களில் நான்காம் இடத்தில் 'யுரேனஸ்' கிரகத்தின் ஸ்திதிக்கு (Location) கலை உள்ளம் வாய்க்கிறது. ஞானகாரகன் என்று இந்திய ஜ்யோதிஷ பல நூல்கள் கூறும். 'இராகு'வின் இயலகளில் பலங்கொண்ட இக்கிரகத்திற்கு ஞான ஸித்தி (Achievement of Knowledge) பிரதான பலனுக்கு உரிய தாகும். ஞானம் என்பது அறிவு (Knowledge); அது அத்யான் மிகத் துறையின் விசேஷங்களையே பெரும்பாலும் குறிக்கும் என்றாலும், பொருள் எல்லையில் (Material Plane) அறிவுத்துறைகளில் பெறும் விலாஸங்களை யெல்லாம் 'ஞானம்' என்றே கருதலாம். இவ் வகையில், உலகுக்கு சொல்லால்-எழுத்தால் உதவுவோர்கள் கவிஞர்கள்-கலைஞர்கள்—எழுத்தாளர்கள் என்று கொண்டாடப் பெறுகின்றனர். அத்தகையோர்களில் பலருக்கும் நான்காம் பாவம் (வித்யா ஸ்தானம்-அறிவு இடம்) இந்த யுரேனஸின் செல்வாக்குக்கு உட்பட்டிருக்கும். நான்காம் பாவம் இதன் ஆதிக்கத்திற்குட் பட்டிருப்பவர்களுக் கெல்லாம் கலையே ஜீவன். இலக்கியத் துறையில் பதிவுக்குரிய சிருஷ்டிகள் யுரேனஸின் இனிய செல்வாக்கின் பலத்தால்தான் அவர்களுக்கு சாத்தியமாகிறது.

பதினாறும் நூற்றாண்டில் மேலை நாட்டில் தோன்றி யிருந்த மகா கவி ஷேக்ஸ்பியருக்கு நான்காம் பாவத்தில்தான் யுரேனஸ் ஸ்திதி பெற்றிருக்கிறது. மேலை நாட்டு நாடக இலக்கியங்களுக்குப் புதிய சகாப்தத்தைத் தொடங்கியவர் இவர். கிழக்கில்-முக்கியமாக தமிழ் நாட்டின் ஒப்புவமையற்ற உயர்ந்த இலக்கியங்களுடன் சேர்த்து எண்ணத்தக்க அளவில் இவர் வழங்கிய நாடகங்கள் சில தோன்றிய நலம் யுரேனஸின் பலத்தில் தான் என்று தெரிகிறது.

நம் தமிழ் நாட்டில் இன்று வெளிவந்திருக்கும் சிறந்த கதைகளுள் பேறிஞர்களால் தலை சிறந்த தொன்றாகக் கருதப்படும் 'உயிரோவியம்' என்னும் நிகரற்ற இலக்கியப் பொக்கிஷத்தை வழங்கியுள்ள ஆசிரியர் நாரண-துரைக்கண்ணன் ('ஜீவா') னுக்கும் யுரேனஸ் நான்காம பாவத்தில்தான் இடம் பெறுகிறது. கவிதா சக்தி கொண்ட இவர், உரை நடை உலகிலே பண்டிதர்களுக்கும் —மறுமலர்ச்சிஎழுத்தாளர்களுக்கும் நடுவே, எவரும் ஏற்றுக்கொள்ளும்விதம் மிக்வும் சரளமான போக்கில் ஒரு நல்ல வழியைக் கண்டவர். காலத்துக்கு ஏற்ற விதம் இவரது அரிய சேவை இனிமை நிறைந்த கவர்ச்சியிலும் புதிய மலர்ச்சியிலும் இருப்பது நான்காம் பாவமும் அதன் அதிபனும் யுரேனஸின் நல்ல செல்வாக்குக்குட்பட்டிருப்பதனால்தான் என்று கூறலாம்.

பொதுவில், நான்காம் பாவம் யுரேனஸ் கிரகத்தின் நல்ல செல்வாக்குகளுக்கு உட்பட்டிருப்பவர்கள் எவரும் வாய் வளத்தை விட, பேறு வளம் மிகுதியும் உடையவர்களாகவே பெரும்பாலும் இருக்கின்றனர். ஆத்மார்த்தமான விருத்திகளும்-அதன்பால் வரும் அனுபவ ரகசியங்களும் இவர்களுக்கு இயலாகவே உரிமை கொண்டவை. எனவே, அவ்வழியில் இவர்கள் பெரிய வெற்றி களுக்கு உரியவர்கள். இத்தகையோர்களுடைய இனித்த அனுப வங்கள், உலகின் அதிருஷ்ட வசமாகவே பொருள் எல்லையில் பெரு விளக்கங்களாக அவர்களால் வழங்கப்படுகின்றன. இந் நிலையில் உலகினரின் தொடர்பு இவர்களுக்கு இருந்துவரும். சுவானுபவத்தில் திருப்தியடைந்த ஞானியைக் காட்டிலும் இவர் கள் பெரியவர்கள். இவர்களால்தான் அவ் அப்பொழுது உல கிலே நேர்மை காக்கப்படுகிறது.

நிற்க, கலையின் முக்ய அம்சத்திற்குத் தலை சிறந்தது 'புதன்' என்னும் கிரகம். இதன் ஆட்சி இடங்களில் யுரேனஸ் ஸ்திதி பெறுமேனும், அவற்றுக்கு அதன் நல்ல செல்வாக்கு இருக்கு மேனும் அத்தகைய நிலையுடையவர்கள் சொல்லிலும் எழுத்தி லும் ஒருங்கே திறமை கொண்டிருப்பார்கள். அத்யான்மீகம் அவர்களுக்கு ஜீவநாடி. அவர்களுடைய சொல்லும்-எழுத்தும் புதிய உத்வேகத்தை எழுப்பவல்லவையாக விருக்கும். தங்களு டைய கருத்துக்களை மிகவும் கவர்ச்சிகரமாகப் பிறருக்குச் சொல்லிலும்-எழுத்திலும் விவரிக்கும் ஆற்றல் அவர்களிடம் இருக் கும். ஆனால், அதில் அவர்கள் கையாளும் வழி அதுவரையுள்ள வழக்கைத் தழுவாத (unconventional) ஒரு புதிய மாதிரியில் மிக வும் வசிகர முடையதாக விருக்கும். 'வல்லான் வகுத்தது வாய்க் கால்' என்ற உலக வழக்கு அவர்கள் வழிக்கு இணங்கி நிற்கும், அல்லது உலக வழக்கு அவர்கள் வழியைத் தன்னுடன் இணைத் துக்கொண்டு பெருமைப்படும்.

உதாரணமாக, இலக்கியத் துறையில் புதிய ஆதர்ஸத்தைச் சிருஷ்டித்து விட்ட **தேசீய கவி சி. சுப்ரமண்ய பாரதியார்** வழங்கிய பாடல்களைக் கூறலாம். இவருக்கு யுரேனஸ் புதக் கிரகத்தின் ஆட்சி வீடுகள் ஒன்றில் இடம் பெறுகிறது. உலகப் பிரசித்தி பெற்ற **வங்க நாட்டுக் கவி—ரவீந்திரநாத தாகூருக்கும்** அவ்வாறே புத னுடைய ஆட்சி இடங்கள் ஒன்றில்தான் இருக்கிறது. ஆனால், முன்னவருக்கு புதக் கிரகத்தின் எதிர்மறைப் பலம் (Negative) வாய்ந்த **'கன்யா'** ராசியிலும், பின்ன வருக்கு நேர்முக இயல் (Positive) வாய்ந்த **'மிதுன'** ராசியிலும் அதன் ஸ்திதி இருக்கிறது. இதனால், அதன் செல்வாக்கு அது இடங்கொளும் ராசிகளை அனு சரித்து வேறு வேறான பலன்களைத் தந்திருக்கின்றது. இவ்வழி, முன்னவரிடம் தேசிய ஆவேசமும், பின்னவரிடம் சுயம்புவான கலை யின் லட்சியங்களில் அதிகம் மெருகுகளுடன் எதையும் ஆளும் நிலையும் பலனாக விருக்கிறது.




# பிள்ளையாரும் சனீஸ்வர பகவானும்

பி. ஆர். கிருஷ்ணன்



"வாரணும்! வாரணும்! இவ்வளவு தூரம் என்னைத் தேடி வந்தது நான் செய்த பூர்வ ஜென்மப் பூஜாபலனே, உட்காருங்கள்" என்று சொல்லிக் கொண்டே, பிள்ளையார் ஐந்நூறு கொழுக்கட்டை, வடை முதலியவைகளை உள்ளே செலுத்தினர்.

அன்று விநாயகர் சதுர்த்தி தினம். தனது அன்பர்களால் சமர்ப்பிக்கப்பட்ட மோதகம், வடை, சுண்டல், பாயசம் முதலியவைகளைப் பக்ஷபாதமின்றி, தமது பருத்துச்செழித்திருந்த தொந்தியுள் புகுத்தியவராய், சிறிது சிரம பரிகாரம் செய்து கொண்டு, பிள்ளையார் உட்கார்ந்திருந்தார். "காற்றுள்ள போதே தூற்றிக் கொள்" என்னும் பழமொழி கணபதிக்குத் தெரியாதா, என்ன! தெரிந்தும் வருடத்திற் கொருமுறை கிடைக்கும் அபூர்வ பக்ஷணங்களை மூக்கில் ஓர் பருக்கை வரும்வரை சாப்பிடாமலா இருப்பார்? (ஐயோ! மன்னிக்கவும்! பிள்ளையாருக்கு மூக்கில்லை என்பதை மறந்தே போய் விட்டேன்.)

இப்படிப் பலவகைச் சிற்றுண்டிகளை ஆனந்தமாய்ச் சாப்பிட்டுக் கொண்டிருந்த விநாயகர், திடீரென நடுங்கினர். என்ன செய்வதென்று தெரியாது திகைத்தார். தமது பருத்த சரீரத்துடன் ஓடவோ முடியாத காரியம். திடீரென ஒரு யோசனை தோன்றியது. உடனே நிம்மதியாய் வருபவரை வரவேற்க உட்கார்ந்திருந்தார். உள்ளே எழுந்த பயத்தை வெளிக்குக் காட்டாது, கோபத்துடன் வெகு வேகமாக வந்து கொண்டிருந்த சனீஸ்வர பகவானை உபசரித்து உட்காரும்படி கேட்டுக் கொண்டார்.

'கணபதி! நம்மை யாரென மதித்தீர்? என்னையும் சனி அணுகு வானோ எனக் கர்வத்துடன் நம்மை ஏளனம் செய்த தாகக் கேள்விப் பட்டேன். உமது தந்தையையே ஆட்டி வைத்த நமக்கு நீர் ஒரு பொருட்டா? ஏதோ சிறு பிள் ளையென்று இத்தனை காலம் பொறுத்திருந்தோம். தெரியுமா? இனிமேல் சும்மாவிட முடியாது. இப்பொழுது என்ன சொல்லுகிறீர்?'' எனக் கர்ஜித்தார்.

'ஐயோ! ஒரு பாவமுமறியேன்; மன்னிக்கவும். 'உண்ட மயக்கம தொண்டனுக்கும் உண்டு என்பார்கள். மிக்கக்களைப் பாயிருக்கிறது. தயவு செய்து நாளை வந்து பிடித்துக் கொள் ளுங்கள்' என மிகப் பணிவுடன் உரைத்தார். சனீஸ்வரரும் சிறிது இரங்கிப் போகப் புறப்பட்டார். அப்பொழுது பிள்ளையார், 'சனிபகவானே! தங்கள் கையில் அகப்படாத வருமுண்டோ? தங்கள் புகழ் பரவாத இடமில்லை. தங்கட் கிருக்கும் வேலையில் அடியேனை மறந்திடா வண்ணம், நாளை தாங்கள் வருவதாய் எனது தொந்தியில் எழுதி விட்டுச் செல்லும்' எனப் பணிவுடன் தம் தொப்பையைக் காட்ட, சனீஸ்வரரும் அவ்வாறே எழுதிச் சென்றார்.

மறு நாள் சனி பகவான், தம்மைப் பார்த்து சிரித்துக் கொண்டே மிக அலட்சியமாய்ப் பிள்ளையார் உட்கார்ந்திருந் ததைக் கண்டு, கண்களில் கோபத்தீ ஜொலிக்க, 'ஆகா, உனக் கிவ்வளவு தைரியம் வந்ததா? என்ன பாடு படுத்துகி றேன் பார். நான் யார் தெரியுமா?' என்று வெகு ஆவே சத்துடன் நெருங்கினார் சனீஸ்வரர்.

'என்ன சனீஸ்வரா! ரொம்ப அவசரம்போ லிருக்கி றதே? என்ன இவ்வளவு கோபம், நாளை வருவதாகச் சொன்னவர், இன்றே வந்துவிட்டீரே? எனக்கொரு அவ சரமும் கிடையாது; நாளை வந்தாற் போதும். என் தொந்தி யில் நீரே நாளை வருவதாக எழுதியிருப்பதைப் பாரும், என்று பிள்ளையார் சிரித்துக் கொண்டே சனீஸ்வர பகவா னுக்குத் தமது தொந்தியைச் சுட்டிக் காட்டினர்.

பாலர்களே! எப்படி, பிள்ளையார் செய்த தந்திரம்! பார்த்தீர்களா?

---

ளித வாழ்க்கையில் ஏதாவது ஒரு அநுபவத்தின்போது, சந்தர்ப்ப வசமாய் இயற்கையில் விஞ்ஞான பூர்வமாக ஏதேனும் ஒரு மாறுதலான காட்சி தோன்றலாம். அந்த மாறுதலின் காரணத்தை விஞ்ஞானரீதியில் விளக்குவான் விஞ்ஞானி. ஆனால் முன் சொன்ன அந்த அநுபவத்தில் பங்கெடுத்துக் கொண்டவனுக்கு அந்தக் காரணங்கள் உண்மையாகப்படுமா? உணர்ச்சி வசத்தனாகப் போன அவனுக்கு ஏதேதோ அமானுஷ்யமான எண்ணங்களில்தான் நம்பிக்கை விழுகிறது; அவற்றை நினைந்துத்தான் அவன் உருகுகிறான்!

# வானத்தில் கண்ட ஜோதி

ஏ. கே. பட்டுசாமி



எங்களது படகு மஹாபலி புரத்தை யடைந்தபோது இரவு சுமார் ஏழு மணி யிருக்கும். அன்று பௌர்ணமி. சந்திரன் ஜாஜ்வல்யமான பிரகாசத்துடன் தாரகை மணிகள் புடைசூழ வான வீதியில் ஆட்சி புரிந்து கொண்டிருந்தான். கடற்காற்று மிக உல்லாசமாக வீசிக் கொண்டிருந்தது. மஹாபலி புரத்தின் 'லைட்ஹௌஸ்' தனது பிரகாசமான விளக்குகளுடன் மெதுவாகச் சுழலத் தொடங்கியது. "இதோ பார்! இந்த 'லைட் ஹௌஸு'க்கு இரண்டு ஒளி வீச்சுகள். இது சுழலும்போது, ஒரு வீச்சு மற்றொன்றைத் துரத்திக்கொண்டு ஓடிப் பிடிக்க முயல்வதுபோல் தோன்றுகிற தல்லவா!" என்றான் ரகுநாதன். "ஹா ஹா! என்ன வர்ணனை! பெரிய கவிச் சிரேஷ்டன் தான்! இறங்கு படகை விட்டு!" என்று பரிகாசமாக மொழிந்தான் மாதவன். எல்லோரும் படகை விட்டு இறங்கினோம்.

எங்கள் கூட்டத்தில், ரகுநாதன், மாதவன், ஸ்ரீ குமாரன் நம்பூதிரி, பசுபதி, நான் ஆக ஐவரிருந்தோம். ரகுநாதனுக்கு கவிதைகளில் பிரேமை அதிகம். சிறு கவிகளும் இயற்றுவான். மாதவன் வான சாஸ்திரம் பயில்பவன். நம்பூதிரி மிகத் தெய்வபக்தியுள்ள வேதாந்தி. தமிழ் பேசினால் புரிந்துகொள்வான். பதில் ஆங்கிலத்தில் கூறி விடுவான். பசுபதி, பண்டைக்கால நாகரீகங்களைப்பற்றியும், பண்டைக்காலச் சிற்பக் கலையைப் பற்றியும் ஆராய்ச்சி செய்து வந்தான். நாங்கள் மஹாபலிபுரத்துக்குப் புறப்பட்டது அவனது தூண்டுதலால் தான்.

கையில் கொண்டு வந்திருந்த ஆகாரத்தைச் சாப்பிட்டு விட்டு அன்றிரவை எங்கேயாவது ஒரு கற்பாறையின் மீது கழிப்பதென்றும், பொழுது புலர்ந்த பின் பல்லவ மன்னர்கள் நிர்மாணித்து வைத்துள்ள தெய்வீகச் சிற்பங்களைக் காணச் செல்வதென்றும் தீர்மானித்தோம். ஆற்றங்கரைப் படகுத் துறைக்கும் மாமல்லபுரம் பாறைத் தொடர்களுக்கு மிடையே சுமார் அரைமைல் தூர மிருக்கும். ஆகாரம் முடிந்ததும், ஒரு விசாலமான மேடு பள்ளமற்ற பாறையைத் தேடிப் பிடித்தோம். மாதவன், துண்டை விரித்துப் போட்டுப் படுத்துக்கொண்டான். விண் மீன்கள் அவனது கவனத்தைக் கவர்ந்தன. மற்ற நால்வரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தோம்.

மணி ஒன்பதிருக்கும். நாங்களிருந்த பாறையின் மேல் இன்னும் யாரோ வொருவர் ஏறி வருவது போன்றிருந்தது. காவி வஸ்திரம் தரித்த

ஒரு ஸ்வாமியார் கால்களி லணிந்த பாதக்குறடுகள் "டக் டக்" கென்று சப்திக்க ஏறி வந்தார். வந்ததும் அவர் ஒரு புறமாகத் தனியே உட்கார்ந்து கொண்டார். அவருக்குச் சுமார் நாற்பத்தைந்து வயதிருக்கும். மெலிந்த தேகி. அவரது முகம் துயரம் நிரம்பியதாகக் காணப்பட்டது. இவைகள் தான் அப்போது எங்களால் கவனிக்க முடிந்தவை.

நாங்கள், சுவாமியாருடைய வருகையைக் கவனியாததுபோல் பேச்சை ஓட்டிக் கொண்டிருந்தோம். பசுபதி, "உலகில் எல்லாருடைய இச்சைகளும் இஷ்டப் படும்போது பூர்த்தி யாவதில்லை. எதற்கும் காலம் வர வேண்டும்." என்றான் பேச்சு வாக்கில்.

"வாஸ்தவமான பேச்சு!" என்றார் புதிதாய் வந்த துறவி.

நாங்கள் அவர் பக்கம் திரும்பினோம். அவர், "இதோ! இந்தக் கடலைப் பாருங்கள். சந்திரனொளியில் இதன் அலைகள், சிவபெருமானின் கைலையங்கிரி யெனும் வெள்ளிமலைத் தொடர்போல் திகழ்கின்றன. சமுத்திரராஜன் தனது வெள்ளி அலைகளாகிய பரிவாரங்களுடன் சீறிக்கொண்டு கரையின் மீது மோதி, அதைத் தாண்டிக்கொண்டு வந்துவிட முயற்சிக்கிறான். ஆனால் அவனது ஆவல் பூர்த்தி யடையாது அலைகள் சிதைவுண்டு, இரைச்சலுடன் திரும்புகிறான்! தாங்கள் கூறுவதுபோல் எதற்கும் காலம் வரவேண்டும். அந்தக் காலம் வந்து, சமுத்திர அரசன் வெற்றி பெற்றால், அதுதான் பிரளயம். சென்ற முப்பது வருடங்களாக, ஒவ்வொரு வருடமும் இந்தச் சமயத்தில் இச் சரீரம் இங்கு வந்து உட்காரும்போதெல்லாம், இதைப்பற்றித்தான் சிந்தித்துக் கொண்டிருப்பது வழக்கம்" என்றார் சுவாமியார்.

"முப்பது வருடங்களாகவா! இப்போது என்ன, இங்கு ஏதாவது திருவிழாக் காலமா?" என்று கேட்டேன் நான்.

"ஆம்; திருவிழாதான்! கோவிலிலிருக்கும் சுவாமிக்கல்ல. இச் சரீரத்தின் கண்களுக்கு! இன்று ஒரு அற்புதம் நிகழப் போகிறது. அவ் வற்புதம், கடந்த முப்பது வருடங்களாக நிகழ்ந்து வருகிறது. அதைக் காண்பதற்காகத்தான் இக் கட்டை வருடந்தோறும் இவ்வூருக்கு வருகிறது."

மாதவனும் தனது ஆராய்ச்சி கலைந்து எழுந்து வந்து எங்களோடு சேர்ந்து கொண்டான். ஐவரும் சுவாமியாருக் கருகில் சென்று உட்கார்ந்து கொண்டு அன்று நிகழப்போகும் அற்புதத்தைப் பற்றிக் கூறும்படி வேண்டிக்கொண்டோம். சுவாமியார் கூறலானார்:

"நீங்கள் அறிந்துகொள்ள விரும்பும் விஷயத்தைப்பற்றிக் கூறுவதற்கு முன், சுமார் நாற்பது வருடங்களுக்கு முன்னால் நடந்த உண்மைச் சரிதையொன்றைக் கூறவேண்டியதா யிருக்கிறது. அப்போது செங்கற்பட்டு ஜில்லாவைச் சேர்ந்த வேலம்பட்டி யென்னும் கிராமத்தில் ஓர் ஏழைத் தம்பதிகள் வசித்து வந்தனர். கங்காதர ஐயருக்கு—அதுதான் அவ் வேழை கிருகஸ்தனின் பெயர்—தமதென்று கூறிக் கொள்ளக்கூடியவை, அவரது பத்னி கோமதியம்மாள், மூன்று வயதுக்குழந்தை பாலு, அவர்கள் வசித்து வந்த ஒரு ஓட்டை வீடு, இவைகள் தான்.

"வருடா வருடம் இவ்வூரில் (மஹாபலிபுரத்தில்) மாசி மாதத்தில், மகநக்ஷத்திரதினம் விசேஷ வைபவங்களுடன் கொண்டாடப்படுவது வழக்கம். பல திசைகளிலிருந்தும் ஆஸ்திகர்கள் வந்து குழுமுவர். அவ் வருடம் கோமதியம்மாள், மாசி மகோற்சவ தினத்தில், மஹாபலிபுரத்திற்கு

வந்து, சமுத்திர ஸ்நானம் செய்து, ஞானபிரானைத் தெரிசித்து அவனருளைப் பெற வேண்டுமென விரும்பினள். இவ் விருப்பத்தைத் தனது பதியிடம் தெரிவித்தாள். அவரும் அதற் கிசைந்தார்.

"வேலம்பட்டி, இந்த ஸ்தலத்திலிருந்து சுமார் முப்பது மைல் தூரத்திலுள்ளது. கொஞ்சம் "ஜவேஜு" உள்ளவர்கள் வண்டிகளில் வருவர். ஆனல் கங்காதர ஐயர் வண்டி வாடகைக்கு எங்கு செல்வார்? இரண்டு தினங்கள் முன்னதாகவே தமது மனைவியுடனும் குழந்தையுடனும் கால்நடையாகக் கிளம்பினர். அன்று சுமார் இருபது மைல்கள் நடந்தனர். கையிலும் ஆகார மொன்றுமில்லை. களைப்பு மேலிட்டது. கோமதியம்மாளால் நடக்கக்கூட முடியவில்லை. குழந்தை பாலு, "பசி பசி" யென்று கதறுகிறன். காக்கை குருவிகளையும் விருக்ஷங்களையும் வேடிக்கை காட்டிக் கொண்டே வந்தனர். ஆனல் பசியோடிருந்த குழந்தையின் மனம் வேடிக்கைகளில் செல்லவில்லை. பொழுது சாய்ந்து இருட்டி விட்டது. இனி மஹாபலிபுரத்தை யடைந்தால்தான் எங்காவது ஆகாரம் கிடைக்கும். ஆனல் மஹாபலி புரத்துக்கு இன்னும் பத்து மைல் தூர மிருந்தது. இனி ஓரடியும் பெயர்த்து வைக்க முடியாதென்ற நிலைமை ஏற்பட்டவுடன், அன்றிரவை வழியிலேயே கழித்துவிட்டு மறுநாட் காலையில் பிரயாணத்தைத் தொடர்வதெனத் தீர்மானித்தனர்.

"இரவு ஒன்பது மணி யிருக்கும். எங்கும் காரிருள் கப்பிக் கொண்டது. கங்காதர ஐயரும் கோமதியம்மாளும், நடந்த அலுப்பினல் நன்கு உறங்கி விட்டனர். பாலுவுக்கு மாத்திரம் தூக்கம் வரவில்லை. அவன் அழுதுகொண்டே யிருந்தான். பசி அவன் வயிற்றைப் பிடுங்கத் தொடங்கியது. தூரத்தில் ஒரு விளக்கு வெளிச்சத்தைக் கண்டான். மெதுவாக எழுந்து அதை நோக்கி நடந்து ஒரு சிறிய கூடாரத்தை யடைந்தான். உள்ளே ஒரு கிறிஸ்தவப் பாதிரியார் உட்கார்ந்திருந்தார். உற்சவ காலத்தில், ஜனங்களிடையே கிறிஸ்தவ மதபோதனை செய்வதற்காகப் புறப்பட்டவர் அவர். பாலு தைரியமாய்க் கூடாரத்தினுள் நுழைந்தான். பாதிரியார் அக் குழந்தையைக் கண்டதும் ஆச்சரிய மடைந்தார். குழந்தை பாலு அவருடைய தாடியைக் கண்டு பயந்தான். திரும்பிப் போக யத்தனித்தான். அதற்குள் அவர் அக் குழந்தையின் கையில் ஒரு பிஸ்கோத்தைக் கொடுத்துச் சமாதானப் படுத்தினர். பசியோடிருந்த குழந்தை அதை ஒரே வாயில் விழுங்கியது. அது பசியோடிருக்கிற தென்பதை யறிந்த பாதிரி, மற்றும் சில தின் பண்டங்களையும் கொடுத்தார்.

"அக் குழந்தையை யாராவது அழைத்துக்கொண்டு வந்திருப்பார்களென்று நினைத்துக் கூடாரத்துக்கு வெளியே வந்து பார்த்தார். ஒரே இருட்டாயிருந்தது. ஒருவரும் காணப்படவில்லை. அவர் அக்குழந்தையைக் கடவுளால் அனுப்பப்பட்ட தேவதூதன் என்று நினைத்தார். மறுநாள் அதிகாலையில் அவர் அவ்விடத்திலிருந்து புறப்பட்டபோது குழந்தையையும் தம்முடன் கொண்டு போய் விட்டார்.

"காலையில், கங்காதரய்யரும் கோமதியம்மாளும் குழந்தையைக் காணது திடுக்கிட்டனர். சுற்றுப் புறமெங்கும் தேடினர். என்ன பயன்! கோமதியம்மாள் புழுவெனத் துடித்தாள். அவளடைந்த துயரத்தை விவரித்தல் அரிது. அதற்கு மேலே கூற எனக்குச் சக்தியில்லை. குழந்தையை உயிரோடு பறி கொடுத்து விட்டுத் தாங்கொணத் துயரத்துடன் ஊர் திரும்பினர்" என்று சற்று நிறுத்தினர் சுவாமியார். அவர் தமது கண்களில் துளித்த நீரைத் துடைத்துக் கொண்டார்.

“ விதியின் இரும்புப் பிடிகளிலிருந்து விடுபட்டவர் அநேகமாக ஒருவருமிலர். துன்பம் வந்தால் தொடர்ந்து வருகிறது. பட்ட காலிலே படுமென்பது போல் ஏக்கத்தினாலும், வறுமைப்பிணியினாலும் அவ்வருடமே சங்காதர ஐயர் மாண்டார். கணவனை யிழந்து, குழந்தையையும் தொலைத்த கோமதியம்மாளின் மனோ நிலை எப்படியிருக்கு மென்பதை நீங்களே யோசித்துப் பாருங்கள். அவளால் எப்படிச் சந்தோஷத்துட னிருக்கமுடியும்! நடைப் பிணம்போல் காலம் கடத்தி வந்தாள். ஆனால் அவளுக்கு மாத்திரம், என்றைக்காவது ஒரு நாள், பாலு தன்னிடம் திரும்பி வருவானென்ற ஒரு அசட்டு நம்பிக்கை யிருந்து வந்தது. அவள் தினந்தோறும் இரண்டு பேருக்குச் சமைத்து வைத்துவிட்டு, நெடுநேரம் வரையில் பட்டினியாய்க் காத்திருந்து, பிறகு சாப்பிடுவாள். அடுத்த வீட்டுக்காரிகள், “நீ ஏன் இரண்டு பேருக்குச் சமைத்து வைக்கிறாய்!” என்று கேட்டால், அவள், “என் கண்ணன் திடீரென்று திரும்பி வந்தால் அவனுக்கு நான் சாதம் போட வேண்டாமா?” என்பாள்.

“ பாலுவின் தொட்டில், அவனது விளையாட்டுச் சாமான்கள், வீட்டில் அவன் புழங்கிய இடங்கள், அவனுக்குப் பிரியமான கன்றுக்குட்டி இவைகளைக் கண்ணுறும் போதெல்லாம் அவளது துயரம் எல்லையை மீறிவிடும். தெருவில் போகும் சிறுவர்களை யெல்லாம் பார்த்து, “நம் பாலு இருந்தால் இவ்வளவு உயரமிருப்பானல்லவா!” என்று எண்ணிப் பெருமூச் செறிவாள். ஊருக்குப் புதிதாக யாராவது சிறுவர்கள் வந்தால், ஒருக்கால் தனது பாலுவாக இருக்கக் கூடுமோ வென்று, ஓடிப் போய்ப் பார்ப்பாள். கையிலும் பொருளில்லை. மனநோயோடு வறுமை நோயும் சேர்ந்து அவளை வதைத்தது. ஆகவே கோமதியம்மாள், இரண்டு வீடுகளில் வேலை செய்து தன் குழந்தைக்காக உயிர் வாழத் தொடங்கினாள்.

“ இப்படியே பன்னிரெண்டு வருடங்கள் கழிந்தன. வசந்த காலத்தில் ஒருநாள் காலை கோமதியம்மாள் வயிற்றுப் பிழைப்புக்காக, கணபதி ராமய்யர் வீட்டில் ஏதோ வேலை செய்து கொண்டிருந்தாள். இத் தருணத்தில், மேனாட்டு உடையணிந்த இரு வாலிபர்கள் வேலம்பட்டியின் அக்ரஹாரத்தின் வழியாக மிதி வண்டி (சைக்கில்) சகிதம் நுழைந்தனர். அவர்கள், அக்ரஹாரத்தில் பெரிதாகக் காணப்பட்ட கணபதி ராமய்யர் வீட்டு வாயிலில் வந்திறங்கினர்.

“ கணபதி ராமய்யரின் வீட்டுத் திண்ணையின் மேல், ராமசேஷய்யர், சுப்பராம தீக்ஷிதர், ஜெகத்ரக்ஷக சாஸ்திரிகள் முதலியோர் உட்கார்ந்திருந்தனர். வருணாச்ரம தர்மத்தைப்பற்றி வம்பளந்து கொண்டிருந்த அவர்கள், புதிதாய் வந்த சிறுவர்களைக் கண்டதும் தங்கள் பேச்சை நிறுத்தினர். ஜெகத் ரக்ஷக சாஸ்திரிகள், வாலிபர்களை நோக்கி, ‘நீங்கள் யாரப்பா! யாரைத் தேடிக் கொண்டு வந்தீர்கள்?’ என்று கேட்டார். சிறுவர்களிருவரில் கருத்த பையன், ‘நாங்கள் சென்னையில் வசிப்பவர்கள். என் பெயர் தேவசுந்தரம்! அவன் பெயர் ஜார்ஜ்!’ என்றான்.

“ பிராமணர்கள் ‘ சிவசிவா ! பறப்பயல்கள் !’ என்று முணுமுணுத்துக் காதைப் பொத்திக்கொண்டனர். திண்ணைக் கச்சேரியின் ஓசை திடீரென நின்று, பிராமணர்கள் யாரையோ விசாரிப்பதை யறிந்த கோமதியம்மாள் வெளியே ஓடிவந்தாள். அச்சிறுவர்களில் சிவப்பாக இருந்தவனைக் கண்டதும், அவன் தனது மகனாக இருக்கக் கூடுமென்று, அவளுடைய மனதில் ஏதோ வொன்று கூறியது.

"ராம சேஷய்யர், 'நீங்கள் இப்போது எங்கே வந்தீர்கள்?' என்று கேட்டார்.

"ஜார்ஜ் என்ற அவ்வழகிய சிறுவன், "நான் சென்னையில் ஒரு பாதிரியாரால் வளர்க்கப்பட்டவன். எனக்கு என் தந்தையாரைத் தெரியாது. அப்பாதிரியார் இறந்து போகையில், என்னிடம் அவர் என்னை, நான் மூன்று அல்லது நான்கு வயதுக் குழந்தையாயிருந்தபோது, மஹாபலிபுரத்துக்குச் சுமார் ஏழெட்டு மைல் தூரத்தில் தனியே இருக்கக் கண்டு எடுத்து வளர்த்து வந்ததாகவும், பிறகு தீர விசாரித்ததில், நான் வேலம்பட்டி கங்காதர ஐயருடைய பிள்ளையென்று தெரியவந்ததாயும், ஆனால் இவ்வளவு காலமாக என்னை விட்டுப் பிரிய மனமில்லாது இவ்விஷயத்தை என்னிடம் கூறவில்லை யென்றும் தெரிவித்தார். நான் என் தாய் தந்தையர்களைக் காண்பதற்காகவே வந்தேன்" என்று கூறி முடிக்குமுன், கோமதியம்மாள் "என் கண்ணே, பாலு!" என்று ஓடிச் சென்று அவனைக் கட்டிக்கொண்டாள். அவளது உணர்ச்சி கரைகடந்து விட்டது. அவளது கண்களில் கண்ணீர் பெருகியது.

"அந்தணர்கள், 'சே! பறப்பயலைப் போய்ப் பிள்ளை என்கிறாள்!" என்று கூவினர்.

"விஷயங்கள் நன்கு விவரிக்கப்பட்டன. கிராமத்தாரில் சிலர் அச்சிறுவனுக்குப் பாலுவின் ஜாடை இருப்பதாக அடையாளங் கண்டு பிடித்தனர். அவ்வாலிபனின் இடது உள்ளங்கையிலிருந்த மச்சம் அதை ஊர்ஜிதப்படுத்தியது. ஆனால் அந்தணர்கள், 'பறையன் வீட்டில் வளர்ந்த பிள்ளையை ஜாதியில் சேர்த்துக் கொள்ளவே கூடாது' என்றனர்.

**கோமதியம்மாள்:**—யார் வீட்டில் வளர்ந்தாலென்ன! என் செல்வம் என் வயிற்றில் பிறந்தவனல்லவா! எனது இரத்தம் அவனுள் ஓடுகிறதல்லவா!

**கணபதிராமய்யர்:**—அதெல்லாம் முடியாத காரியம். அவனை உன் வீட்டில் சேர்த்துக் கொண்டால் உன்னை ஜாதிப்ரஷ்டம் செய்து விடுவோம்.

**கோமதி:**—ஐயோ! உங்களுக்கெல்லாம் குழந்தை குட்டிகள் இல்லையா? என் குழந்தையைப் பகவான் இத்தனை வருடங்களாகப் பிரித்து வைத்தார். இனிமேலாவது நான் அவனுடன் என் அந்திய காலத்தைச் சந்தோஷமாய்க் கழிக்க நீங்கள் அனுமதிக்க மாட்டீர்களா? உங்களுக்கு இரக்க மில்லையா?— என்று கல்லும் கரையும் வண்ணம் கெஞ்சினாள். ஆனால், அவ்வந்தணர்களுடைய ஹிருதயங்கள் கல்லினும் கடினமானவை. கோமதியம்மாளின் பரிதாபகரமான வேண்டுகோள் அவர்களது மனோ நிலையைச் சிறிது கூட மாற்றவில்லை.

**ராமசேஷய்யர்:**—சரியாய்ப் போச்சு! வருணாச்ரம தர்மம்—உன்னதமான சநாதன தர்மம்! என்ன ஆவது! உனக்காக அவைகளை நாங்கள் தலை முழுகிவிட முடியுமா?

**ஜெகத்ரக்ஷக சாஸ்திரி:**—அவனைக் கூட்டி வைத்துக்கொள்ள வேண்டுமானால் அவனுடன் நீ இந்த ஊரை விட்டுப் போய்விடு.

**கோமதி:**—(தன் மகனைப் பார்த்து) கண்ணே! பாலு வாடாப்பா! என் செல்வமே! நாம் வேறே எந்த ஊருக்காவது சென்று பிச்சையெடுத்தாவது பிழைக்கலாம்! இவர்களது சநாதன தர்மத்தில் இடி விழட்டும்.

"பைத்தியம் பிடித்தவள்போல் கூவினள் கோமதி.

"பாலுவின் மனது ஏதோ வேதனை செய்தது. தனது தாயென்று கூறிக்கொண்ட ஸ்திரீயின் மீது அவனுக்கு இரக்கம் உண்டாகியது. பிராம்மணர்களின் அட்டகாசத்தைக் காணச் சகிக்கவில்லை. ஆனால் அதே சமயத்தில், அந்தப் பிராம்மணர்கள் ஒருவேளை சம்மதித்தாலுங் கூட, அவனுக்கு அந்த கிராமத்தில் வசிக்கவும், இத்தனை காலமாக கிறிஸ்தவர்களின் மத்தியில் வாழ்ந்து விட்டுத், திடீரென்று பிராமணர்களின் மத்தியில் வசிக்கவும் இஷ்டமில்லை. அவனுடன் வந்திருந்த அவனது நண்பன் அவனிடம் ஆங்கிலத்தில் ஏதோ கூறினன். உடனே அவன் கோமதியம்மாளை நோக்கி, 'அம்மா! நான் உங்களை அடிக்கடி வந்து பார்த்துக்கொண்டு போகிறேன். இந்தப் பிராமணர்களுடன் தகராறு வேண்டாம்'' என்றுகூறிக் கொண்டே தனது நண்பனுடன் மீதி வண்டியிலேறிச் சென்று விட்டான். கோமதியம்மாள், 'என் கண்ணே, பாலு! உனக்காகத் தானேடா நான் இத்தனை நாள் உயிர் வாழ்ந்து வந்தேன்! என்னை விட்டுப் போகாதேடா, என் கண்மணீ!' என்று கதறிக் கொண்டே ஓடினள். பயனில்லை. சிறுவர்கள் மறைந்து விட்டனர்.

"கோமதியம்மாளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. அவள் பல இடங்களிலும் அலைந்து கடைசியாக மஹாபலி புரத்தை யடைந்தாள். காலதேவன் இந்த க்ஷேத்திரத்தில் வந்து அவளது உயிரைக் கவர்ந்து சென்ருன்'' என்று கூறிப் பெருமூச்சு விட்டார் சுவாமியார்.

ரகுநாதன், "இதற்கும் இன்று ஏதோ அற்புதம் நிகழப் போவதாகக் கூறினீர்களே, அதற்கும் என்ன சம்பந்தம்? அவ் வற்புதம் என்னவென்றே கூறவில்லையே!'' என்று கேட்டான்.

சுவாமியார், "பொறுங்கள் கூறுகிறேன். இன்னும் கதை முடியவில்லை. கோமதியம்மாள் இறந்த பின் ஒரு வருடம் கழித்து, பாலு தன் தாயைப் பார்த்து விட்டுப் போவதற்காகக் கொஞ்சம் பணத்தை யெடுத்துக் கொண்டு வேலம்பட்டியை யடைந்தான். அவளை மஹாபலி புரத்தில் கண்டதாகச் சிலர் கூறினர். உடனே இவ்வூருக்கு வந்து ஒரு செம்படவனிடம் விசாரித்தான். அச் செம்படவன் 'அந்தம்மாவுக்குப் பைத்தியம் பிடிச்சிருந்தது துங்க. எப்பப் பாத்தாலும் பாலு! பாலுண்ணு கதறிகிட்டிருந்தாங்க. ஒரு நாள் இப்படித் தானுங்க ராத்திரி பத்து மணியிருக்குங்க; அண்ணிக்குப் பௌர்ணமிங்க; நெலவு நல்லா காஞ்சுது. நான் கரையிலிருந்து தோணியைத் தண்ணீலே தள்ளிகிட்டிருந்தேன். அந்த அம்மா திடீருண்ணு வந்து 'பாலு! வந்துட்டேன்! ஓடாதே!' ண்ணு கூவிகிட்டே ஓடி வந்து சமுத்திரத் தண்ணீலே உளுந்துட்டாங்க. ஆறு உசிரு பூடிச்சுங்க. அப்புறம் ஊரிலிருந்தவங்க வந்து பாத்து எடுத்துக் கொளுத்திட்டாங்க!'' என்ருன்.

'இந்தச் சம்பவம் நடந்து எவ்வளவு காலமாயிற்று?' என்று கேட்டான் பாலு.

"செம்படவன் கூறினன்: 'சரியா இன்னணிக்கு ஒரு வருசம் ஆவுதுங்க. எப்படிண்ணு அதுக்கு முன் நாள் தான் எங்க மாமன் இறந்துட்டாருங்க. அவருக்கு நேத்து தான் திதி வந்தது துங்க......ஹூம்...... அந்தம்மாவுக்கு உயிர் போனதும் ஆகாசத்துலே ஒரு மின்னல் மின்னிச்சு, பாருங்க...மப்பு இல்லே, மழையில்லே—திடீருண்ணு மின்னிச்சுங்க...''' என்று சுவாமியார்

மேலும் கதையைக் கூறிக்கொண் டிருக்கும்போதே, திடீரென்று ஆகாயத்தில் தோன்றி ஒரு மின் வெட்டு எங்கள் கண்களைப் பறித்தது. சுவாமியார் வானத்தை நோக்கி, "அம்மா!" என்று கதறினார். அவருடைய அலறல் எங்களது நரம்புகளை ஒரு தட்டுத் தட்டி எங்களை மயிர்க் கூச்செறியச் செய்தது. ஆகாயத்தை நோக்கினோம். அதோ வடமேற்கு மூலையில் ஒரு பிரகாசமான அகண்ட ஜோதி தோன்றிச் சுமார் பத்து விநாடிகள் தாமதித்துப் பின் மறைந்தது.

சிறிது நேரம் மௌனம். சுவாமிகளின் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந்தது. மனவெழுச்சியினால் அவரால் சிறிது நேரம் வரையில் பேச முடியவில்லை. பிரமை பிடித்தவர்போ லிருந்தார். பிறகு ஒருவாறு தேற்றிக்கொண்டு கூறலானார்.

"செம்படவன் கோமதியம்மாள் இறந்தபோது வானத்தில் ஒரு மின்னல் தோன்றியதாகக் கூறினேனல்லவா! அதேமாதிரி மின்னலும் ஜோதியும், பானு மஹாபலிபுரத்திற்கு வந்த தினமும் உண்டாயின. அதாவது அன்று ஒரு வருடம்—அவளிறந்து—அது முதல் பானு வருடாவருடம் தவறாமல் இவ் வைசாகப் பௌர்ணமி தினத்தன்று மஹாபலி புரத்திற்கு வருகிறான் இச் சோதியைக் காண. அவன் தாய் ஜோதிஸ்வரூபமாய் விளங்குகின்றாள்" என்று கூறி முடித்தார் சுவாமியார். ஞானபிரான் சந்நிதி ஆராதனை மணி, அவர் கூறியதை ஆமோதிப்பதுபோல் "டாங், டாங்!" என்று ஒலித்தது.

"அப்படியானால் தாங்கள் தான்........" என்றேன் நான்.

"ஆம்! இக் கட்டையைத்தான் 'பானு' வென்றழைப்பார்கள்" என்றார் சுவாமியார்.

* * * *

மறுநாள் ஊருக்குத் திரும்பும்போது மாதவன் இதைப் பற்றித் தன் அபிப்பிராயத்தைக் கூறினான். வானத்தில் நாம் கண்ட ஜோதி, சந்திரனின் பிரதிபலிப்பே யல்லாது வேறில்லை. இதற்குக் காரணத்தை சவிஸ்தாரமாக நான் வானசாஸ்திரப் புத்தகங்களைப் புரட்டிப் பார்த்துக் கூறுகிறேன்" என்றான். ஆனால் நம்பூதிரி இதை ஒப்புக்கொள்ளவே யில்லை. மற்ற மூவரும் அபிப்பிராயத்தில் நம்பூதிரியைப் பின்பற்றத் தயாரா யிருந்தோம்.

---

## புத்திமதி

கேப்டன் அதிக நேரம் கழிந்து வந்த சோல்ஜரைப் பார்த்து, "இவ்வளவு நேரம் தாமதித்து வந்ததற்கு காரணம் என்ன?" என்றார்.

சோல்ஜர்:—வழி தெரியவில்லை.

கேப்டன்:—வழியா தெரியவில்லை?

சோல்ஜர்:—ஆம்; சார்

காப்டன்:—உனக்கு வழி தெரியவில்லை. அதனால் டவுன் முழுவதும் உனக்கு நன்றாய்த் தெரிகிற வரையில் இந்த வட்டாரத்தை விட்டு எங்கும் போக வேண்டாம்.

—ஜா. பரமதயாளு.

**ஆல்பெர்ட் அயின்ஸ்டீன் நோபல் பரிசு பெற்ற ஜெர்மன் தேசத்து மேதை. சுருக்கமாக இங்கே வரையப்பட்டுள்ள அவருடைய வாழ்க்கை வரலாற்றை அனைவரும் படித்தறிய வேண்டியது அவசியம்.**

# ஆல்பெர்ட் அயின்ஸ்டீன்

சிவ-அமிர்தலிங்கம்



நம் நாடு ஏன் இன்னும் இந்நிலையில் இருக்கிறது என்று கேள்வியை எழுப்பிக்கொண்டு ஆராய்ந்தோமானால், நற்பண்பு வாய்ந்த மக்களைக் கைதூக்கி விட ஆட்கள் இல்லாமையால் தான்.

சர். சி. வி. ராமனைப் போன்ற பேரறிவாளிகளின் ஆராய்ச்சிகளை நாடோறும் நம் தினசரிப் பத்திரிகைகளிலும் வாரப் பத்திரிகைகளிலும், மாதத் தாள்களிலும் வெளியிடல் வேண்டும். நாட்டு மக்களின் அறிவு வளர்ச்சியுற வேண்டுமானால் அறிஞர்களைப் போற்றவேண்டும். தாகூர், ராமன் போன்ற நோபல் பரிசு பெற்ற பெரியோர்களின் வாழ்க்கையைப் படம் போலச் சித்தரித்து எழுதவேண்டும். அப்பொழுது தான் ஒவ்வொருவருடைய மனத்திலும் பின் கண்ட சிந்தனை தோன்றும், 'நாமும் ஏன் இப்பெரியோர்களைப்போல் முன்னுக்கு வர முடியாது?' என்று!

ஆல்பெர்ட் அயின்ஸ்டீன் என்னும் நோபல் பரிசு பெற்ற பெரியாரின் வாழ்க்கையைப் படிக்கும் ஒவ்வொருவர் மனத்திலும் மேற் கூறப்பட்ட கேள்வி மனத்தில் தோன்றியே தீரும். அவருடைய வாழ்க்கை அவ்வளவு விசித்திரமானது!

ஜெர்மனியின் தென்பாகத்திலுள்ள 'மியூனிச்' என்னும் நகரத்திற்கு அருகிலுள்ள 'அல்ம்' (Ulm) என்னுமிடத்தில், யூத குடும்பத்தில் ஹெர்மன் என்ற வியாபாரிக்கும் அவர் மனைவி 'பாலின்' என்பாருக்கும் ஒரே மைந்தராய், கி. பி. 1879-ல் ஆல்பெர்ட் அயின்ஸ்டீன் பிறந்தார். இவருடைய தந்தையார் மின்சாரக் கருவிகளை விற்பனை செய்து பணக்காரரானார்.

ஆல்பெர்ட் அயின்ஸ்டீனின் நான்காவது வயதில் ஒரு விசேடம் நிகழ்ந்தது. இவரது தந்தையார் காந்த ஊசி ஒன்றை வீட்டுக்குக் கொண்டு வந்தார். அவ் ஊசியை, எவ்விதம் திருப்பினும் இறுதியில் தென்வட லாகவே நிற்பதை அயின்ஸ்டீன் கண்டார். அவருக்கு இயற்கையில் மனம் இலயித்தது.

ஆறுவது வயதில் இவர் பள்ளிக்கு அனுப்பப்பட்டார். அக்காலத்துப் பள்ளிகளில் 'ஏழை, பணக்காரன்' என்று வேறுபாடுகளை மாணவர் மனத்தில் ஆசிரியர்களே தோன்றச் செய்தனர். அயின்ஸ்டீன் இளமையிலேயே இவ் வேறுபாடுகளை வெறுத்தார். அதனால் அத்தகைய பள்ளிகளையும் இவர் வெறுக்க நேர்ந்தது.

வகுப்புவாத உணர்ச்சியும் கற்பிக்கப்பட்டது. ஒரு சமயம் ஆசிரியர் ஒருவர் துருப்பிடித்த ஆணி ஒன்றைக் கையில் கொண்டு, 'ஏசுவைச் சிலுவையில் அறைய உதவி செய்த ஆணி இதுவே'' என்று கூறினர். மாணவ ரனைவரும் யூதச்சிறுவரான அயின்ஸ்டீனைச் சினத்துடன் நோக்கினர். மனம் நொந்தார் அயின்ஸ்டீன்.

ஆரம்பக் கல்வி முடிந்ததும் மற்றொரு பள்ளிக்குச் சென்றார் அயின்ஸ்டீன். அப் பள்ளியில் தேகப்பயிற்சிக்கு மட்டும் பரிசுகள் வழங்கினர். கணிதத்தில் இவர் மிக வல்லவர். உலகத்திலேயே சிறப்புற்றிருக்கும் கணித ஆசிரியர்களில் இவர் முதன்மை ஸ்தானம் வகிப்பதாகச் சொல்லுகிறார்கள். ஆசிரியர்களாலும் காண முடியாத அபார கணித ஞானம் இவருக்கு இருந்தது.

வியாபார மந்தம் ஏற்பட்டதால் இவரது பெற்றோர் இவரைத் தனியே விட்டுவிட்டு இத்தாலியிலுள்ள 'மிலான்' என்னும் நகரத்திற்குச் சென்றனர். இவர் பெற்றோரைப் பிரிந்திருக்க விருப்பமில்லாமல் டாக்டர் சர்டிபிகேட் வாங்கிக் கொடுத்துவிட்டு மிலானுக்கே சென்றார். 'மெட்ரிகுலேஷன்' பரீட்சையிலும் அந்த ஆண்டு தேறவில்லை. ஸ்விட்ஸர்லாந்திலுள்ள 'ஸூரிச் தொழிற் கல்விக் கழகத்தில்' சேர்ந்துவிட எண்ணினர். 'மெட்ரிகுலேஷனில்' தேறினவர்களை மட்டுமே அக்கழகம் வேலைக்கு ஏற்றுக் கொண்டது.

ஆகையால் அயின்ஸ்டீன், ஸ்விட்ஸர்லாந்திலுள்ள ஒரு பள்ளியில் சேர்ந்து படித்துத் தேறினர். கழகத்திலும் சேர்ந்தார்.

அத் தொழிற்கல்விக் கழகத்தில் அறிவிற் சிறந்த ஆசிரியர் பலர் இருந்தனர். ''வெபர், 'ஹெர்மன் மின்கொஸ்கி', 'கேஸெர்', முதலியோரிடம் அயின்ஸ்டீன் கற்றார். பௌதிகம், கணிதம் ஆகியவற்றில் அயின்ஸ்டீனுக்கு இருந்த ஆர்வமும் திறமையும் மேற்கூறப்பட்ட ஆசிரியர்களால் மேன்மேலும் விருத்தி யடைந்தது. 'கிர்க்காப்', 'ஹெர்ட்ஸ்', 'ஹெம்கோல்ட்ஸ்,' முதலியோரின் ஆராய்ச்சிக் கட்டுரைகளை ஆவலுடன் படித்துணர்ந்தார் அயின்ஸ்டீன். 'மார்ஸல் கிராஸ்மன்' என்ற அரிய நண்பரையும் அக் கழகத்திலேயே நட்புச் செய்து கொண்டார். இளமையில் வறுமை வயப்பட்டார். 21-ம் ஆண்டில் தொழிலில் அமர்ந்தார். இரண்டாண்டுகள் ஆசிரியத் தொழில் நடத்தினர்.

பிறகு, 'உரிமைப் பரிசோதக இலாக்காவின்' தலைவரான 'ஹாலெர்' என்பவரின் உதவியால் 'பரிசோதகர்' பதவி பெற்றார். 1902-ல் அவ் வேலையில் அமர்ந்தார். மூன்றாண்டுகள் அங்கேயே இருந்தார். 1903-ல் 'மிலெர்வா மாரிக்கு' என்னும் பெண்ணைக் காதலித்து மணம் செய்து கொண்டார். 1904-ல் ஒரு குழந்தையும் பிறந்தது.

ஒழிவு நேரங்களில் எல்லாம் இவர் ஆராய்ச்சி செய்து கொண்டே இருப்பார். மூன்றே ஆண்டுகளில் இவரது ஆராய்ச்சிகள் உருப் பெற்றன. 1905-ம் ஆண்டில் பல ஆராய்ச்சி யுரைகளை

இவர் வெளிப்படுத்தினர். ஸூரிச்சு யூனிவர்சிட்டி இவருக்கு 'சாஸ்திர பண்டித' பட்டம் அளித்தது.

இவரது புகழ் ஐரோப்பா முழுவதும் பரவிற்று. பலர் இவருக்குப் பகைவராயினர். 'மாக்ஸ் பிளாங்க்' முதலிய பெரியோர்கள் இவரை அடிக்கடி சந்தித்து அளவளாவி மகிழ்ந்தார்கள்.

ஹாலந்து, ஜெர்மனி முதலிய நாடுகளில் இவர் சிறந்த சொற்பொழிவுகள் நிகழ்த்தினர்.

1909-ல் ஸூரிச் சுந்தொழிற்கல்விக் கழகம் இவருக்குப் போராசிரியர் பதவி கொடுத்தது. ஐந்து ஆண்டுகளை இனிமையாகக் கழித்தார். முதல் விவாகம் இவ் விடைக்காலத்தில் ரத்துச் செய்யப்பட்டது.

பேர்லின் சர்வகலாசாலையும் இவரது அபார அறிவைக் கண்டு போராசிரியர் பதவி கொடுத்தது. 1914-ல் ஜெர்மனிக்கு வந்தார். ஜெர்மன் கலாசாலையில் ஆராய்ச்சி செய்வோர் மாணவரா யிருப்பினும் ஆசிரியரா யிருப்பினும், தம் ஆராய்ச்சிகளைப் பற்றிச் சொற்பொழி வாற்றவோ, விளக்கவோ பூர்ண உரிமையுண்டு.

சில வருஷங்களுக்கு முன்னல் ஜெர்மனியிலிருந்த யூதர்கள் அனைவரும் நாடு கடத்தப்பட்ட பொழுது, ஆல்பெர்ட் அயின்ஸ்டீனும் வெளி யேறவேண்டியவ ரானர். அது வரையில் இவர் ஜெர்மன் சர்வகலா சாலையிலேயே பதவி வகித்து வந்தார். மகா யுத்தம் நடந்து வந்தபொழுது இவர் ஆராய்ச்சியிலேயே தம் காலம் முழுவதையும் செலவழித்தார்.

சர்வதேச சங்கத்தின் அங்கத்தினரானர். ஆயினும் பின், பிரான்ஸின் செய்கையைக் கண்டு அதினின்றும் விலகி விட்டார்.

1921-ம் ஆண்டில் இவருக்குப் பாரிஸ் பட்டணத்திலும் இலண்டன் நகரத்திலும் அதற்கு முன் கேட்டிராதும் நடந்திராத வரவேற்பு நிகழ்ந்தது. 'பால்போர் பிரபு' என்று பெயர் கொண்ட இங்கிலாந்தின் பிரதம மந்திரியார், இவரை நியூட்டன், கலிலியோ முதலியோரைக் காட்டிலும் சிறந்த அறிஞர் என வாயார வாழ்த்தினர்.

**1921-ம் ஆண்டிலேயே நோபல் பரிசையும் அயின்ஸ்டீன் பெற்றர்.**

நோபல் பரிசுத்தொகை 8000 பவுன். அதில் தமக்கென்று ஒரு சிறிய தொகையையும் எடுத்துக் கொள்ளாமல் எண்ணாயிரம் பவுனையும் கல்வி வளர்ச்சிக்கென்றே அளித்து விட்டார். பாரிஸ் சர்வகலாசாலையும் இவருக்கு 'சாஸ்திர பண்டித' பட்ட மளித்தது.

குணாதிசயங்கள்:—'ஆன்றவிந் தடங்கிய சான்றோர்'களில் அயின்ஸ்டீனும் ஒருவர். இவர் மிக அடக்கமான குணம் உள்ளவர். ஆடம்பரம என்பதே இவரிடத்தில் கிடையாது. நிதானமாகப் பேசுவார். சாந்த குண முள்ளவர். இவர் கண்டுபிடித்த உண்மையை, 'வெறும் வேதாந்தம்' என்று இவரது

பகைவர்கள் ஜனங்களிடையே புரளி செய்தனர். இதைக் கண்ட அயின்ஸ்டீன் தம்மையே நொந்து கொண்டு, 'நான் கண்டுபிடித்த உண்மை யாவருக்கும் தெரியும்படி சொல்ல முடியாததா லல்லவா பலரும் என்னைத் தூற்ற நேர்ந்தது? என்றார்.'

சமூகக் கொள்கைக்கு அடிமைப்படும் குணம் இவரிடம் இல்லை. பழைய ஆடையை உடுத்துச் சென்றதற்கு இவர் நண்பரொருவர் பரிகசித்தும் கூட்டத்திற்கும் அதே ஆடையை அணிந்துசென்றார்.

இவர் இந்தியாவிலும் இலங்கைத் தீவிலும் பிரயாணம் செய்த பொழுது இந்தியரை இவர் மிகப் புகழ்ந்து கொண்டாடினார். சீன மக்களின் ஏழ்மையைக் கண்டு மனம் நொந்தார். 'நியூயார்க்கை' உலகத்தின் தலைநகர மென்றார். இவருக்கு 'பிடில்' வாசிப்பதில் மிகவும் தேர்ச்சி உண்டு. இலக்கியத்தில் இவருக்கு 'ஷேக்ஸ் பியர்,' 'கதே' ஆகியோரிடத்தில் விருப்ப மதிகம். 'கால ஆகாச சமுச்சய நியாயத்தை' எடுத்துக் காட்டியவர் இவர்தான்!

மேற்படி 'நியாய'த்தின் சுருக்கம்:—'காலம்,' 'இடம்' ஆகியவை புலன்களால் அறியப்படும் உணர்ச்சிகள். சம்பவங்களினால் காலத்தை அறிந்து கொள்ளுகின்றோம். தூங்கும் போது நமக்குக் கால உணர்ச்சி ஏற்படுவதில்லை.

வியாபக வஸ்து.—ஒளியானது ஒரு விநாடிக்கு 186000 மைல் வேகத்தில் பரவுகின்றது. அப்படிப் பரவுவதற்கு ஒரு வஸ்துவின் உதவி அவசியம் என எண்ணினார்கள். ஆகவின் அந்த வஸ்து 'கனமற்றது,' நீண்டு சுருங்குவது' என்று மனம் போன போக்கெல்லாம் கூறினார்கள். மைக்கெல்சன் செய்த சோதனையினால் 'வியாபக வஸ்து உண்டென்றால் அது பூமியுடன் சுற்ற வேண்டும்' என்று எண்ண இடமுண்டாயிற்று.

மைக்கெல்சன் கொள்கைக் கேற்ப 'வியாபக வஸ்து இல்லை' என்றார் அயின்ஸ்டீன். 'நிலைத்த ஒரு வஸ்து வேண்டுமானால் காலத்தையும் இடத்தையும் இணைக்கவேண்டும். இல்லாததைப் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்?' என்று அயின்ஸ்டீன் கூறினார். இவர் கூறிய அனுமானத்தின்படியே பல நிகழ்ச்சிகளும் நடந்தன. ஆகவின் இவர் அனுமானம் 'சரி' யென்று ஏற்பட்டது. இவர் கண்டுபிடித்த உண்மைகள் சில:—

(1) பிரகிருதியும் பூத சக்தியும் ஒன்று.

(2) ஒளிக்கும் மின்சாரத்திற்கும் உள்ள சம்பந்தங்கள் என்பன.

மனிதர்களாகப் பிறந்தோர் பலவித அல்லல்கள் அடைந்து இறுதியில் சுகம் பெறுவர். அறிஞர்களுக்குத் தம் கொள்கைகளை நிலைநாட்டுவதில் பல தடைகள் உண்டாகும். ஆயின், தம் கருமமே கண்ணா யிருப்பர் அன்னோர். அறிஞர் என்றால் தருக்கித் திரியாமல் அடக்கமாக இருந்து தொண்டாற்ற வேண்டும் என்பதற்கு இவரே சான்று.

அயின்ஸ்டீனைப் போல் நம் நாட்டில் பல பேரறிஞர்கள் தோன்றவேண்டும்.

ஏமாற்றுவதற்கு இன்னார் இனியார் என்று கிடையாது. அதுவும் எத்தனை பேர் கூட்டுறவோடும், எவ்வளவு பகிரங்கமாகவும் நடக்கிறது, பாருங்கள்!

# ஏமாற்றம் 

"கிச்சு"



இங்கிலாந்தில் தாமஸ் என்பவன் ஒரு பெரிய ஹோட்டல் வைத்திருந்தான். பெரிய கனவான்களெல்லாரும் அவன் ஹோட்டலுக்கு வருவார்கள். ஒருநாள் சாயங்காலம் ஐந்து மணியிருக்கும். ஒரு யுவன் காரில் வந்து இறங்கினான். அவனுக்கு வயது முப்பது இருக்கலாம். தாமஸ் ஓடோடிப் போய் அவனை வரவேற்றான்.

"எனக்கு மாடியில் ரூம் ஒன்று வேண்டும்" என்றான் வந்த யுவன்.

"நல்ல வேளையாய் இப்பொழுது தான் ஒரு ரூம் காலியாச்சு; நீங்களும் வந்தீர்கள்" என்றான் தாமஸ். மாடியில் காலியாயிருந்த ரூமிற்கு அவனை அழைத்துச் சென்றான் தாமஸ். ஜேம்ஸின் கையில் —வந்தவன் பெயர் ஜேம்ஸ்தான்—ஒரு டிராயிங் பேபரால் சுற்றின ஒரு படமும் இருந்தது. ஆனால் புதிதாக வந்தவனை எப்படி உடனே கேட்கிறது என்று தாமஸ் ஏங்கோப் பட்டான்.

அடுத்த நாள் காலையில் கணக்குப் புஸ்தகங்களை எடுத்துப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது ஜேம்ஸ் வந்தான். "உங்களிடம் ஒரு நிமிஷம் பேசவேண்டும். உங்களுக்கு ஒழியுமா?" என்று கேட்டான். "பேஷாகப் பேசலாம். உள்ளே வாருங்கோ" என்று தன் அறைக்கு அழைத்துச் சென்றான் தாமஸ்.

"சோப்பளாங்கிபுரம் ஜமீன்தார் இங்கே அருகிலிருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவரைப் பார்க்கலாமென்று நான் லண்டனிலிருந்து வந்தேன். தான் கட்டிக் கொண்டிருக்கும் பங்களாவில் மாட்டுவதற்காகப் பிரசித்தி பெற்ற சித்திரக்காரர்களின் படங்களையெல்லாம் வாங்குகிறார் என்று கேள்விப்பட்டேன். அவர் ரெம்ப்ராண்ட் (Rembrandt) படங்கள் என்றால் உயிராயிருக்கிறாராம் என்று லண்டன் முழுவதும் பேச்சு" என்றான் ஜேம்ஸ்.

"ஆமாம்! நீங்கள் சொல்லுவது சரிதான். அவரிடம் ரெம்ப்ராண்ட் எழுதிய படங்கள் குறைந்த பட்சம் இரண்டு டஜன்கள் இருக்கும்" என்றான் தாமஸ்.

"நான் தற்செயலாக ஒரு கடையில் ரெம்ப்ராண்டின் படம் ஒன்றை ரொம்ப மலிவாக வாங்கினேன். அக்கடைக்காரனுக்கு அப்படத்தின் மகிமை தெரியாத படியால் ரொம்ப மலிவாகத் தட்டி விட்டேன்" என்றான் ஜேம்ஸ். அந்த அதிர்ஷ்டம் தனக்குக் கிட்டியிருக்கக் கூடாதா என்று தாமஸுக்குத் தோன்றியது. தன் ஜாதக விசேஷம் எது எடுத்தாலும் லாபகரமாய் முடிய மாட்டேன் என்கிறதே என்று தாமஸுக்கு வருத்தம்தான்.

"அந்த ஜமீன்தாரைப் பார்த்து விட்டு வரலாம் என்று வந்தேன். போய் விசாரித்ததில், 'அவர் எங்கேயோ வெளியூருக்குப் போயிருக்கிறார். வர இன்னும் பதினைந்து நாள் செல்லும்' என்று தோட்டக்காரன் சொல்லுகிறான். எனக்கு என்ன பண்ணுவது என்று புரியவில்லை" என்றான் ஜேம்ஸ்.

"ஏன்?" என்றான் தாமஸ்.

"இங்கே எனக்கு இரண்டு வாரம் வரையில் இருக்க முடியாது. லண்டனில் எனக்கு அவசர வேலையிருக்கிறது. என்னுடன் ரெம்ப்ராண்டின் படத்தைக் கொண்டுவந்திருக்கிறேன். அதைக் கொண்டு போய் விட்டுத் திருப்பிக் கொண்டு வருவானேன்? இங்கேயே மாட்டி விட்டுப் போகலாம் என்று பார்க்கிறேன்" என்று சொல்லி விட்டுத் தாமஸின் பதிலை எதிர்பாராமலேயே மாடிக்குப் போய்ப்படத்தைக் கீழேகொண்டு வந்து அவ்வறையில் ஒரு கொக்கியில் மாட்டி விட்டான். அப்படத்தைத் தாமஸ் பார்த்தான். அவனுக்குப் பட விஷயங்களைப் பற்றி அதிக ஞானமில்லை. இருந்தாலும் அது விலையுயர்ந்த படமென்று மட்டும் அவனுக்குத் தெரியும். ஆனால் பின்னால் தான் அது எவ்வளவு விலையுள்ளது என்று தாமஸுக்குத் தெரிந்தது.

* * * *

ஜேம்ஸ் வந்துவிட்டுப் போன அடுத்த நாள் மத்தியானம் காலேஜ் புரொபெசர் ஜான் என்பவன் தாமஸின் ஹோட்டலுக்கு வந்தான். காப்பி சாப்பிட்டு விட்டுப் போகும்பொழுது தாமஸ் இருந்த அறைக்கு, ஐந்து நிமிஷம் தாமஸினிடம் பேசிவிட்டுப் போகலாமே என்று வந்தான். தாமஸும் ஜானும் ரொம்ப நெருங்கிய சிநேகிதர்கள். ஜானுக்கு சித்திர விஷயங்களைப்பற்றித் தெரியும். அவன் சுவரில் மாட்டியிருந்த படத்தைப் பார்த்து விட்டு, "தாமஸ்! எப்பொழுது நீ படம் வாங்கினாய்?" என்று கேட்டான்.

"நான் வாங்க வில்லை. ஹோட்டலுக்கு ஒருவன் வந்திருந்தான். அப்புறம் வந்து எடுத்துக்கொண்டு போகிறேன் என்று மாட்டி விட்டுப் போயிருக்கிறான்" என்றான் தாமஸ். "தாமஸ்! இது யார் எழுதிய படம் என்று உனக்குத் தெரியுமா?" "இல்லை" என்று ஒரே யடியாகப் புளுகினான் தாமஸ். அது யார் எழுதிய படம், அதன் விலையென்ன விருக்கும் என்று அறிவதற்காகத் தான் அவன் புளுகினான்.

"ரெம்ப்ராண்ட் எழுதிய படம்தான் இது. அதில் சந்தேகமே யில்லை. அவனைத்தவிர வேறு யாருக்கு இதுமாதிரி எழுதத் தெரியும்?" என்றான் ஜான்.

"இதன் விலை யென்ன விருக்கக்கூடும்?" என்று கேட்டான் தாமஸ்.

"வாங்கும் ஆசாமியைப் பொறுத்திருக்கிறது விலை. எனக்குத் தெரிந்த வரையில் பதினாயிரம் ரூபாய் கொடுத்துக் கூட

ஒருவர் ரெம்ப்ரர்ன்டின் படத்தை வாங்கி யிருக்கிறார்'' என்றான் ஜான்.

"நிஜமாகவா?'' என்று தாமஸ் ஆச்சரியத்துடன் கேட்டான்.

* * *

அடுத்த நாள் ஹோட்டலுக்கு ஒருவர் காப்பி சாப்பிட வந்தார். சாப்பிட்ட பிறகு தன் சிநேகிதன் ஒருவனுக்கு நாலு நாள் கழித்து ரூம் வேண்டுமென்றும் அகப்படுமா என்றும் கேட்பதற்காகத் தாமஸினிடம் வந்தார். வந்தவர் சுவரில் மாட்டப்பட்டிருந்த ரெம்ப்ராண்டின் படத்தைப் பார்த்துவிட்டு ஆச்சரியத்துடன் நின்றார்.

"இது என்ன விற்பனைக்குத் தானே!'' என்றார்.

"ஆமாம்!'' என்றான் தாமஸ்.

"இந்தா, நான் ஆயிரம் ரூபாய் தருகிறேன். என்ன சொல்லுகிறாய்?'' என்று கேட்டார்.

"இல்லை'' என்றான் தாமஸ்.

"இரண்டாயிரம்''

"ஊஹூம்!''

"இந்தா, ஒரே பேச்சு? மூவாயிரம் தருகிறேன்; என்ன சொல்லுகிறாய்?''

"இல்லை. இதை ஏழாயிரம் ரூபாய் வரையிலும் மதிப்பிட்டிருக்கிறார்கள். இதைச் சோப்பளாங்கிபுரம் ஜமீன்தாருக்காக இங்கே மாட்டி வைத்திருக்கிறேன்.''

"சரி, நான் ஒன்று சொல்லுகிறேன் கேள். இந்தா, என் கார்டு. ஜமீன்தார் வாங்கவில்லை யென்றால் எனக்குத் தந்தி கொடு. நான் உடனே வந்து வாங்கிக் கொள்ளுகிறேன்'' என்றான். அந்த கார்டில் 'ஜோஸப், தூங்குமூஞ்சிபுரம்' என்று எழுதி யிருந்தது.

* * * *

மேற்படி சம்பவம் நடந்த ஒரு வாரம் கழித்து ஜேம்ஸினிடமிருந்து தாமஸுக்கு ஒரு கடிதம் வந்தது. தான் சீக்கிரம் வருகிறதாகவும் படத்தை ஜாக்கிரதையாக வைத்துக் கொள்ளும்படிக்கும் கடிதம் வந்தது.

ஜமீன்தார் அப்படத்தை வாங்கமாட்டார் என்று சொல்லி, எப்படியாவது ஏமாற்றி ஆயிரம் ரூபாய்க்குத் தான் வாங்கி விட்டால், அதை ஜமீன்தாரிடம் ஆறாயிரம் ஏழாயிரத்துக்கு விற்றுவிடலாம் என்ற பேராசை தாமஸின் மனதில் தோன்றியது. ஜேம்ஸின் வரவை ரொம்ப ஆவலுடன் வரவேற்கலானான். ஆனால் இரண்டு வாரமாச்சு; மூன்று வாரமாச்சு. ஜேம்ஸைக் காணோம்.

ஒரு நாள் தாமஸ் தன் ரூமில் உட்கார்ந்து கொண்டிருந்தான். அப்பொழுது யாரோ ஒரு பெண்மணி தன்னைப் பார்க்க வந்திருப்பதாகச் சொன்னான் வேலையாள்.

"அவர்களுக்குத் தான் வேலையென்ன? எதற்காவது 'சப்ஸ்கிரிப்ஷன்' வாங்க வந்திருப்பாள். உள்ளே வரச்சொல்லேன்?" என்ருன் தாமஸ். அவள் வந்தவுடன் தாமஸ் திடுக்கிட்டான். அவள் 'சப்ஸ்கிரிப்ஷனு'க்கு வரவில்லை. அவள் யாருடைய மரணத்திற்கோ துக்கித்துக் கொண்டிருப்பது போல் கருப்பு உடை அணிந்து கொண்டிருந்தாள். அவள் அழகைக் கண்டு வியந்தான தாமஸ்.

அவள் உட்கார்ந்தவுடன் "நீங்கள் தானே தாமஸ்!" என்று கேட்டாள்.

"ஆமாம்" என்ருன் தாமஸ்.

"நான் தான் ஜேம்ஸின் மனைவி. அவர் ஒரு வாரத்திற்கு முந்தித் திடீரென்று மாரடைப்பினுல் இறந்து விட்டார்" என்ருள். அவள் கண்களில் ஜலம் ததும்பியது. அதைக் கைக்குட்டையினுல் துடைத்துக் கொண்டாள்.

"என்ன! இறந்து விட்டாரா?" என்ருன் தாமஸ் திடுக்கிட்டு.

"ஆமாம்" என்ருள்.

"என் ஹோட்டலுக்கு அவர் வந்திருந்த பொழுது இவ்வளவு சீக்கிரத்தில் மரணமடைவார் என்று நான் நினைக்க வில்லை. கடவுளின் செயலே ஆச்சரியகரமா யிருக்கிறது. இன்றைக்கு உயிருடனிருப்பவனை நாளைக்குத் திரும்பிப் பார்க்க முடியும் என்று சொல்ல முடியவில்லை" என்ருன் தாமஸ். அவள் ஏதோ காரியமாகத்தான் வந்திருக்கிருள் என்பதில் சந்தேகமில்லை. அவளுக்குப் பட விஷயத்தைப் பற்றித் தெரியுமோ தெரியாதோ என்று தாமஸுக்குப் புரியவில்லை. அவளுக்குத் தெரியாதென்ருல் அது தன் படம் என்று ஜெமீன்தாரிடம் சொல்லி விடலாமல்லவா? "அவருடைய விஷயங்களைப்பற்றி என்னிடம் அவர் அதிகம் சொல்லுகிற தில்லை. ஆனுல் அவருடைய டயரியைப் புரட்டிப் பார்த்ததில் பலபேர்களிடம் படங்கள் விற்பதற்காகக் கொடுத்திருக்கிருர் என்று தெரிய வந்தது. அதில் உங்கள் பெயரு மிருந்தது" என்ருள்.

தாமஸ் அவளுடைய வார்த்தையைக் கேட்டு மூர்ச்சையடைந்தான் என்று சொல்லவும் வேண்டுமா? ஒருவாறு சமாளித்துக் கொண்டு, "ஆமாம்! அப் படத்தை இங்கே மாட்டி வைக்கும்படிக்கும் யாருக்காவது அது பிடித்தால் தான் பின்ருல் வந்து விலை பேசிக் கொள்ளுவதாகவும் சொல்லி விட்டுப் போனுர். ஆனுல் இங்கே வருபவர்கள் ஒருவராவது அதை வாங்க வேண்டும் என்று அபிப்பிராயப் பட்டதாகத் தெரிவில்லை. அதிருக்கட்டும். அப் படத்தின் விலை இன்னதென்று டயரியில் ஏதாவது குறிப்பிட்டிருந்தாரா?"

"உம்! ஆயிரம் ரூபாய்" என்ருள்.

தாமஸின் மனம் ஆனந்தத்தினுல் துள்ளிக் குதித்தது. இவ்வளவு மலிவாகத் தட்டிவிடக் கூடும் என்று அவன் சொப்பனத்

தில் கூட நினைக்கவில்லை. இருந்தாலும் அதைக் காட்டிக் கொள்ளாமல், "நானே அந்தப் படத்தை வாங்கிக் கொள்ளுகிறேன். ஆயிரம் ரூபாய் என்றால் ரொம்ப கடுமை. எனக்கு ஐந்நூறு ரூபாய்க்கு மேல் கட்டாது" என்றான் தாமஸ்.

"அப்படியானால் படத்தைக் கொடுங்கோ. நான் கொண்டு போகிறேன்" என்றாள்.

"இப்படி அவசரப்படலாமா? எனக்கோ படம் பிடித்திருக்கிறது. உங்களுக்கும் வேண்டாம்; எனக்கும் வேண்டாம். எந்நூறு ரூபாய் கொடுத்து விடுகிறேன். எடுத்துக்கொண்டு போங்கோ" என்றான்.

சரியென்று அவள் சம்மதித்துப் பணத்தை வாங்கிக்கொண்டு போய் விட்டாள்.

* * * *

படம் வாங்கி ஒரு வாரத்திற்கெல்லாம் ஜமீன்தார் திரும்பி வந்து விட்ட சமாசாரம் தாமஸுக்கு எட்டியது. படத்தை எடுத்துக் கொண்டு ஜமீன்தாரைப் பார்க்கப் போனான்.

"தாமஸ்! இதென்ன படம்?" என்று கேட்டார்.

"இது தெரியவில்லையா? இது ரெம்பராண்டின் படமல்லவா? அவர் கடைசிக் காலத்தில் எழுதிய படம் அல்லவா இது?" என்றான்.

"என்ன உளறுகிறாய் தாமஸ்! இது ரெம்பராண்டின படமா? யாரிடம் காது குத்துகிறாய்? ரெம்பராண்ட் இறந்து எத்தனை வருஷமாகிறது? இது எழுதி ஒரு வருஷம் கூட இருக்காதே. ஏமாந்து போய் இதற்கு நீ ஏகப்பட்ட பணம் கொடுத்து விட்டாயா?" என்று ஜமீன்தார் கேட்டார்.

தாமஸ் திடுக்கிட்டான். ஆனால் ஜமீன்தார் சொல்லுவதை ஒத்துக் கொள்ள அவன் மனம் சம்மதிக்கவில்லை. பேசாமல் திரும்பி விட்டான். ஆனால் இப்பொழுது ஒன்றும் முடி முழுகிப் போகவில்லை. உடனே ஜோஸபிற்கு அந்த படத்தை அவனிடம் விற்பதற்காக வைத்திருப்பதாகவும் உடனே வரும்படிக்கும் தந்தி அடித்தான். தந்தி கொடுத்த அன்று முழுவதும் அவன் சாப்பிடவில்லை. ஜோஸப் எப்பொழுது வருவான், எப்பொழுது வருவான் என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். அன்றைய இரவு முழுவதும் அவன் தூங்கவில்லை. அடுத்த நாள் காலை தந்தி திரும்பி விட்டது. ஜோஸப் என்று பெயருள்ளவன் ஒருவனுமில்லை என்று தந்தி திரும்பி விட்டது. தாமஸுக்கு மூளை குழம்பி விட்டது. அவனுக்கு என்ன பண்ணுவது என்று புரியவில்லை. அப்புறம் அப் படத்தைப் பார்க்கும் பொழுதெல்லாம் தன்னைப் போன்ற சாதுக்களை ஏமாற்றும் ஜென்மம் என்ன ஜென்மம்? இல்லை; வெள்ளைக்காரனையே வெள்ளைக்காரன் ஏன் ஏமாற்றுகிறான்? என்று தாமஸுக்குப் புரியவில்லை.

தென்காசித் தாலூகாவில் உள்ள திருமலைக்குமாரர் கோவில் பிரசித்தி பெற்ற தலம். அது இயற்கை வளம் செழித்த இடத்தில் அமைந்துள்ளது. அந்த முருகன் (குமாரர்) விஷயமாக 'திருமலை முருகன் பள்ளு' என்ற ஒரு நூலும் வெளியாகி இருக்கிறது. அந்தக் கோவிலைப் பற்றிய சில விவரங்களைக் கீழே காணலாம்:

# திருமலைக் குமார சுவாமி

க. சிதம்பர நடராஜசுந்தரன்



மக்கள் உயிர் வாழ்வதற்குப் பல சாதனங்கள் உள. அதனுள் தெய்வ வழிபாடும் ஒன்று. அதிலும் மிக்க உயர்வாக உலக மக்களில் பெரும்பாலார் கருதுவது முருகனையே என்னலாம். "முன்னோர் அருளிய நூல்களைக் கொண்டு முன்னவனை வழிபடுவது முறை" எனக் கூறுவர் பெரியோர். "நூலால் நன்றாக நினைமின்கள்" என்று அப்பர் சுவாமிகள் அருளியுள்ளார்கள். அதற்கிணங்க இத்தலம் அமைந்துள்ளது.

## கண்டதும் கேட்டதும்

இத்தலம் பாண்டி நாட்டில் திருநெல்வேலி ஜில்லா, தென்காசித் தாலூக்காவில் செங்கோட்டை புகைவண்டி நிலையத்திற்கு வடமேற்கில் ஏழு மைல் தூரத்தில் திருமலை என்னும் சிறுமலையில் உள்ளது. இதனைச் சிறிய குன்று என்றும் சொல்லலாம். இக்குன்றின்மீது குன்று விளக்கெனக் குமாரப்பெருமான் கோயில் கொண்டுள்ளார்.

இக்குன்றின் உயரம் சுமார் 400 அடிகள் என்று மதிப்பிடலாம். அடிவாரத்திலிருந்து உச்சி வரையில் 544 படிகள் இருக்கின்றன. மலையின் சுற்றுப்பிரகாரம் சுமார் 2 மைல் எனக் கணக்கிடுகின்றனர் அங்குள்ளோர். செங்கோட்டையிலிருந்து பண்பொழி வழியாக இம்மலையை அடையலாம். ரஸ்தாக்கள் சுத்தமாக அமைக்கப்பட்டிருக்கின்றன. தரிசிக்க வருபவர்கள் தங்களுக்கு வேண்டிய உணவு முதலியவற்றைச் செங்கோட்டையிலிருந்தாவது, தென்காசியிலிருந்தாவது கொண்டுவந்தே தீரவேண்டும். விசேஷ காலங்களைத் தவிர மற்றக் காலங்களில் அடிவாரத்தில் ஒன்றுமே கிடைக்காது.

மலையின் அடிவாரத்தில் வல்லபை கணபதி கோவில் உள்ளது. மலையின் இடைவெளியில் நந்தகோபாலர் மண்டபம் உள்ளது. இங்கே இடும்பன் சந்நிதியும் உள்ளது. மலையின்மேல், உச்சிப்பிள்ளையார் கோவிலும் இருக்கிறது. அங்கு சென்று தரிசிப்பவர்களும் உண்டு. அங்கு செல்வதற்காக 16 படிகளும் உண்டு. அதனை வெகு சிறப்பாக அங்கு உள்ளவர்கள் சொல்லுகிறார்கள். பக்கத்தில் தேவஸ்தான விடுதி உள்ளது. அதனை அடுத்து ஒரு சுனையும் உள்ளது. மேற்புறம் சப்த கன்னிகைகளின் சிலைகளும்

உள்ளன். பக்கத்தில் பசு மடம் உள்ளது. அங்கு உள்ள பசுக்களின் பால்தான் அபிஷேகத்திற்கு அனுப்பப்படுகிறது. மலையின் நடுவில் புளியமரம் ஒன்று உள்ளது. அம்மரம் அத்தல விருக்ஷமாக அமைந்துள்ளது. அதன் அடியில் வேலும் மயிலும் கொண்ட கற்சிலை இருக்கிறது. அதுவே இத்தலத்தில் ஆதி சந்நிதி எனச் சொல்லுகிறார்கள்.

மலைமேல் உள்ள குமார சுவாமி கோவில் தெற்கு நோக்கியும், முருகன் சந்நிதி கிழக்கு நோக்கியும் அமைந்துள்ளன. உள்ளே ஒரு பிரகாரமும், வெளியே ஒரு பிரகாரமும் அமைந்துள்ளன. வாயிலை அடுத்து வசந்த மண்டபமும் வெகு அழகாக அமைந்துள்ளது. இதனையே சண்முக விலாசம் எனக் கூறுகிறார்கள். அம் மண்டபச் சுவர்களில் குமார சுவாமியைப் பற்றிய துதிப்பாடல்கள் எழுதப்பட்டுள்ளன. மூல மூர்த்தியாகிய குமார சுவாமியின் திருவுருவம் கண்டவர் மனதைக் கவரச் செய்கின்றது. இவ்விக்கிரகம் "கோட்டைத்திரடு" என்ற இடத்திலிருந்து கொண்டுவரப் பட்டதாகக் கூறப்படுகிறது.

இந்த ஆலயத்தின் மூலமூர்த்திக்குத் திருமலைக் குமார சுவாமி, திருமலை ஆண்டவர், திருமலை ஆண்டி, திருமலை வடிவேலர், திருமலைக் குருபரன், திருமலைப் பெருமாள், திருமலை நாயகன், திருமலை வேலன் எனப் பல பெயர்கள் வழங்குவதாகச் சொல்லுகிறார்கள். அத் தல விநாயகர் அனுக்கைப் பிள்ளையாராம்

இங்கு முன்னம் மூன்று தீர்த்தங்கள் இருந்ததாகச் சொல்லுகிறார்கள். அதனுள் தற்பொழுதுள்ளது, பூஞ்சுனை என வழங்கும் தீர்த்தம் ஒன்றேதான் என்றும் சொல்லுகிறார்கள். அப்பெயர் வரக் காரணம் கேட்டதில் முற்காலத்தில் பெருமான் திருவருளால் தினந்தோறும் அச்சுனையில் ஒரு மலர் தோன்றியதாகவும் அதனைப் பெருமான் திருமுடியில் சூட்டி வந்ததாகவும் சொல்லுகிறார்கள். அச்சுனை என்றும் வற்றாதது; தூய நீரையுடையது; அதனுள் மூன்று கண்கள் இருக்கின்றன என்றும், அது இறைவனுக்குரிய மூன்று கண்களுக்கொப்பானதென்றும் சொல்லுகிறார்கள்.

இத்தலம் பார்ப்பதற்கு வெகு அழகாக அமைந்துள்ளது. குளிர்ச்சி பொருந்திய குன்று. மன அமைதி ஏற்படுவதற்கு ஏற்ற இடம்; தீராத நோய்கள் தீரும் இடம்; மலைமேல் முருகன் மருந்தாக விளங்குகின்றான். பக்திமேலிட்டால் முதிர்ந்த பக்தர்கள் தமது நாக்கைத் துண்டித்து வெற்றிலையில் வைத்துப்பிரார்த்தனை செய்வதாகவும், முருகன் திருவருளால் மீண்டும் அந்நாக்குவளர்ந்து விடுவதாகவும் அங்குள்ளோர் சொல்லுகிறார்கள். இவ்வாலயத்தில் விபூதி பிரசாதம் பன்னீர் இலையில் வழங்கப்படுகின்றன.

இவ் வாலயத்தில் எங்கு மில்லாத பெருங் காட்சி ஒன்று நிகழ்கின்றது. அதாவது பைரவ மூர்த்திக்குத் தேன்வடை மாலையாகச்சாத்தல். இரவுப் பூசைக்குப் பின் கோவிலின் சாவியை இம் மூர்த்தியிடம் ஒப்புக்கொடுப்பது இன்றும் நடந்து வருகின்றது.

அடிமையாகி மனிதத்தன்மை இழந்தவர்களுக்கு, தங்கள் தாய்நாட்டு மகாத்மாக்கள் வெறும் அற்ப மனிதர்களாகவே தோன்றுவார்கள். அவர்களை வாயில் வந்தபடியெல்லாம் தூஷிப்பார்கள். அந்த அடிமைகளுக்குப் பிற நாட்டான் என்றால், அடடா என்ன பக்தி! என்ன பெருந் தகைமை!

# தெய்வ தரிசனம்

எம். எஸ். நித்தியானந்தம்



**தா**ன் வருவதை எச்சரித்துக்கொண்டே வரும் சங்கிலிச் சப்தத்துடனும், 'வீர்' என்ற பேரிரைச்சலுடனும், நான்கு வண்டிகளில் ஏறவேண்டிய ஆட்களை ஒரே வண்டியில் சுமந்துகொண்டு வெகு வேகமாக வந்துகொண்டிருந்தது ஒரு டிராம் வண்டி. ஓடும் வண்டியில், இறங்கவேண்டியவர்கள் சாமர்த்தியம் இருந்தால் இறங்கலாம்; ஏறவேண்டியவர்கள் சாமர்த்தியம் இருந்தால் ஏறலாம். அதுதான் அந்த வண்டிக்கு, அப்பொழுது மின்சார வண்டி இலாகா கொடுத்திருந்த மின்சார வண்டி ஓடும் விதிகளில் ஒன்றாய் இருந்திருக்கவேண்டும்! இல்லையேல் அது நிற்க வேண்டிய இடத்தில்கூட நிற்காமல் ஏன் போகிறது!

வண்டியும் ஒவ்வொரு நிற்குமிடத்தையுங் கடந்து வந்துகொண்டிருந்தது. அங்கேயெல்லாம் ஜனங்கள் திட்டுத்திட்டாய் நின்றபடியே இருந்தனர். ஆனால், சில சோல்ஜர் புலிகளும், சில தைரியஸ்தர்களும் வண்டியில் ஏறுவதை நிறுத்தவில்லை. ஏறுபவர்களுக்கு இடமோ கொஞ்சம்கூடக் கிடையாது. இதைத்தெரிவிப்பதற்கு,வேறு வண்டியில் எல்லோர் கண்களிலும் படும்படி 'வண்டி நிறைந்துவிட்டது' என்ற பலகையும் தொங்கிக்கொண்டுதான் இருந்தது. என்ன இருந்து என்ன பலன்! ஏறும் குருடர்களுக்கு அது எப்படித் தெரியப் போகிறது! நான்தான் அவர்களை எப்படிக் குருடன் என்று சொல்லிவிட முடியும்? பிரயாணம் அதிகமான இந்தக் காலத்தில்,ஒவ்வொருவருக்கும் என்ன முக்கியவேலையோ? இருக்கும் இடத்தில் ஒண்டிக்கொள்ளலாம் என்றுதான் எல்லாரும் நினைப்பார்கள்!

ஆனால், இந்த சோல்ஜர் புலிகளுக்கு என்ன குடி முழுகிப் போய்விடுகிறதோ? முக்கியமாய் ஏறத்துடித்துக் கொண்டிருப்பவர்களுக்குக்கூட இடம் கொடுக்காமல், சில கருப்புத்தோல் சோல்ஜர்களும், வெள்ளைத்தோல்களும், புட் போர்டிலும் வண்டியின் பின்புறமாகவும் அசல் குரங்குகளைப்போலத் தொத்திக் கொண்டே வந்தனர்.

நானும் இவைகளையெல்லாம் பார்த்துக்கொண்டு வண்டியின் முன்னால் கால்கூட வைக்க இடமில்லாமல் ஒரே காலில் நின்றபடி சங்கிலியைப் பிடித்துக்கொண்டு தொங்கியவாறு வந்துகொண்

டிருந்தேன். ஒரு சோல்ஜர் ஏறினன். எனக்கு முன்னால் நின்றிருந்த ஒருவன் காலைத் தனது பூட்ஸ்காலால் மிதித்துவிட்டான். 'ஐயோ' என்று அலறியதிலிருந்துதான் அவன் மிதிபட்டிருக்க வேண்டும் என்று தெரிய வந்தது. எனக்குந்தான் தலையை இப்படி அப்படி அசைக்கக்கூட இடம் கிடையாதே! மிதித்துவிட்ட அந்தச் சோல்ஜர் 'சாரி' என்றான். அவனுக்கு உச்சி குளிர்ந்துவிட்டது. மிதித்த வலிகூடப் பறந்துவிட்டது. 'பரவா யில்லை' என்றான் இளித்தபடியே பதிலுக்கு.

கொஞ்ச நேரம் கழித்து மற்றொருவர் ஏறினர். தவறிக் காலை மிதித்துவிட்டார். அதே ஆசாமியின் காலைத்தான்! வந்துவிட்டதே கோபம். "இந்தத் துலுக்கப் பசங்களே இப்படித்தான். கொஞ்சம்கூடப் புத்தி கிடையாது! வண்டியில்தான் இடம் இல்லை என்று தெரிகிறதே, ஏன் இப்படி மார்டாட்டம் வந்து?" என்று மிதித்தவரைக் கோபித்துக்கொண்டே கையைக்கூட ஓங்கப் போனான் இந்த ஆசாமி! ஆனால், கையை அசைக்க அந்த வண்டியில் இடைவெளி இருந்தால்தானே! முறைத்துப் பார்த்துவிட்டு முணுமுணுத்துக் கொண்டான்.

எனக்கோ, இவன் ஏன் இப்படி அந்த சோல்ஜரைக் கேட்கக் கூடாது? இவன் மட்டும் வண்டி காலியாய் இருக்கும்பொழுதா ஏறினன்? வண்டியெல்லாம் நிறைந்துவிட்ட பிறகுதானே இவனும் ஏறினன்? பிரமாதமாக அந்த முஸ்லீமைக் கோபித்துக்கொண்டானே! இவன் மட்டும் என்ன யோக்கியன்! என்று பட்டது. கேட்டு விடலாமா என்றுகூட வாயெடுத்தேன். ஆனால் ஏனோ கேட்பதற்கு வாய் வரவில்லை.

அந்த முகம்மதியன் மட்டும் "என்னையா! அப்படித்தான் கும்பலில் படும். வேண்டுமென்றா மிதித்தேன்?" என்று மிகவும் சாந்தமாகவே பதிலளித்துவிட்டு வண்டியில் ஒண்டிக்கொண்டான்.

எனக்கோ வெகு ஆச்சரியமாக இருந்தது. அந்த முஸ்லீமைப் பார்த்தால் சும்மா இப்படிச் சாந்தமாகப் பதில் சொல்பவன்போல் எனக்குப் படவே இல்லை. நன்றாய் முறுக்கிவிட்ட மீசை; பெரிய தலைப்பாகை; முழுஜிப்பா; கட்டான சரீரம். வயதும் 30க்கு மேல் இரா து.

வண்டியும் வெகு வேகமாக ஓடிவந்து இராயப்பேட்டையில் நின்றது. சிலர் இறங்கினர்கள்; 'அப்பாடா!' என்று பெருமூச்சு விட்டேன். மூச்சு விடவாவது முடிந்ததே, அது போதாதா! மௌண்ட் ரோட்டில் ஏறின அந்த மிதிபட்ட ஆளும் இறங்கிவிட்டான். ஆனல், அந்த சாய்பு மட்டும் ஏறினதிலிருந்து ஏதோ தன் பாஷையில் 'முணுமுணு' என்று பாடிக்கொண்டு வந்ததை நிறுத்தவில்லை. அதைக் காது கொடுத்துக் கேட்பதற்கே சகிக்கவில்லை. நானும் ஹிந்தி பாட்டுகள் என்றால் ரஸிப்பதில் கை தேர்ந்தவன்தான். என்றாலும், இவர் பாடுவது எனக்குப் பாட்டாகவே தெரியவில்லை. அவர் பாடிக்கொண்டுவரும் பாட்டு

என்ன பாட்டு என்று கேட்கவேண்டும் என்ற ஆசைகூட எனக்கு அதிகரித்தது. வண்டி ஓடும் வேகத்தில் எனது ஆசையும் அதிகரித்தது. கேட்கலாமா வேண்டாமா என்று யோசனை செய்துகொண்டே வந்தேன்.

வண்டியும் அப்பர்சாமி கோவிலண்டை வந்து நின்றது. அந்த முஸ்லிம் இறங்கிவிட்டான். நானோ செந்தோமுக்குப்போக வேண்டியவன். இருந்தும் அவனிடம் பேசவேண்டுமென்ற ஆவா விலை அதே இடத்தில் இறங்கிவிட்டேன். அந்த முஸ்லிம் வெகு வேகமாக நடந்து சென்று கொண்டிருந்தான். நான் பின்னால் தொடர்ந்து 'பாயி' என்றேன். திரும்பிப்பார்த்தான் அந்த முஸ்லிம்; 'சலாம்' என்றான். 'வணக்கம்' என்றேன் நான்.

'என்ன?' என்றான் சாய்பு.

'உங்களை ஒன்று கேட்கனும்: எங்கள் தமிழ் பாட்டுகளிலே நொண்டிச்சிந்து, வண்டிக்காரன பாட்டு இன்னும் பல மாதிரியான பாட்டுகளெல்லாம் இருக்கிறது. அந்தமாதிரி பாட்டுதானா நீங்கள் வண்டியில் பாடிக்கொண்டு வந்தது! இந்த மாதிரி உங்களில் யாரும் பாடி நான் இதுவரைக்கும் கேட்கவில்லை. அதனால்தான் கேட்கிறேன்' என்று சிரித்துக்கொண்டே கேட்டேன்.

'அதெல்லாம் எனக்குத்தெரியாது. இந்தப்பாட்டு குரானில் இருந்து பாடியவை. நான் வண்டியில் ஏறும்போது தவறி ஒரு ஆளின் காலை மிதித்துவிட்டேன். அந்த ஆள் என்னைப் பலமா க்த்திட்டிவிட்டார். கூட்டத்தில் தவறிப் பட்டுவிடுவது சகஜம் தானே! அதை அந்த ஆள் தெரிந்துகொள்ளவில்லை. பிரமாத மாகக் கோபித்துக்கொண்டார். இப்படி அவர் அநியாயமாக என்னைக் கோபித்துக்கொண்டதற்காக அவருக்குப் 'பாவம்' வந்து விடுமே என்று அஞ்சினேன். உடனே அந்தச் சமயத்திலே குரானி லிருந்து ஒரு பாட்டை எடுத்து அவரை மன்னிக்கும்படி அல்லா விடம் பிரார்த்தித்துக்கொண்டேன். மேலும், நானும் தவறி மிதித்துவிட்டதற்கு மன்னிப்புக் கேட்டுக்கொண்டேன். இவ் வளவுதான். எனக்குச் சங்கீதம், கிங்கீதம் எதுவும் தெரியாது' என்று விடைபெற்றுக்கொண்டு நடந்தான்.

நான் அப்படியே ஸ்தம்பித்து நின்றுவிட்டேன். அந்த ஒரே சொல்லில் என்னை அவன் கவர்ந்துவிட்டான்! நிமிர்ந்து பார்த் தேன். அந்த முஸ்லிம் ½ பர்லாங்கு தூரத்தில் சென்றுகொண் டிருந்தான். உடனே பயித்தியக்காரனைப்போல் ஓடிப்போய் 'உங் கள் பெயர் என்ன?' என்றேன்.

'அல்லா' என்றார் அந்த முஸ்லிம்.

'அல்லாவா!' என்றேன் ஆச்சரியத்தால்!

'ஆம்; தெய்வமேதான்!' என்று மனதில் சொல்லிக்கொண் டேன். தெய்வத்தின் பெயரை வைத்துக்கொண்டு, தெய்வம் செய்யும் வேலையையும் செய்துகொண்டு வாழும் அந்த அல்லா சாய்பு எனக்குத் தெய்வமாகவே காட்சி அளித்தார்.

"மனிதன் செய்கிற கொடுமைகளுக்கு மனிதன்தான் ஜவாப்தாரி. கண்ணால் காண முடியாத 'கர்ப்பனை வாதி'யைச் சாட்டி இந்த உலகத்திலே இனி எந்தமனிதனும் தப்பிவிட முடியாது."

# பஞ்சம் யாருக்கு?

தி. மு. ரா. கிருஷ்ணன்



**பா**ஸிஸ வெறிபிடித்த,—கொடூரமே அவதார மெடுத்த ஹிட்லராலோ, அல்லது துருப்பிடித்த கொள்கைகளைப் பிற்போக்குக் கும்பல்கள், முதலாளி வர்க்கங்கள் கடைப் பிடித்ததினாலோ இந்த யுத்தப் பேய் உலகத்தை ஏப்பம்போட ஆரம்பித்து இன்னும் தீர்ந்தபாடில்லை. எந்த மூலையிலேயோ மனிதனின் அபூர்வ விஞ்ஞான சக்தி அந்த மனிதனையே 'பதம்' பார்க்கும் அத்தியாயத்தை ஆரம்பித்தது. பனை மரத்திலே வந்த புண்ணுக்குத்தென்னை மரத்திலே நெறி கட்டின மாதிரி 6000 மைல்களுக் கப்பால் புகைந்த சம்ஹாரம் நம் வீட்டு அடுப்பங்கரையில் வந்து தீப்பிடிக்க ஆரம்பித்து விட்டது. இன்னும் தீ, மத மத வென்று எல்லா மூலை முடுக்குகளிலும் பரவ ஆரம்பித்திருக்கிறது. அந்தோ! அந்தத்தீயில் விழுந்து நாம் செத்துப்போகா விட்டாலும் அனலில் கிடந்து வேகிறோம். நமக்குத் தூக்குத் தண்டனை கொடுக்க வில்லை. ஆனால், சித்திரவதை அநுபவிக்கிறோம். எங்கே பார்த்தாலும் பசி! பட்டினி!! சாவு!!! இன்று "அஞ்ஞாத வாசம் புரியும்"! கடவுளே வந்தாலும் "சோறு" ரூபமாகத்தான் வருவாரேயொழிய மற்றப்படி அவர் வந்து தப்பித்து ஓடுவது என்பது தம்பிரான் புண்ணியம்தான்!! அவ்வளவு மனப் புழுக்கத்தை இந்தத் துர்ப்பாக்கிய நாட்டின் நிலைமை சிருஷ்டித்திருக்கிறது. 'பொன் விளைந்த நாட்டிலே, நீர்வளம் நிலவளம் நிறைந்த இந்த நாட்டிலே, எழில் மிகுந்த இயற்கைக் காட்சிகள் அமைந்த இந்த நாட்டிலே' என்றெல்லாம் வர்ணித்தால் மக்கள் அதை நிராகரித்து விடுவார்கள். ஏறிட்டுக் கூடப் பார்க்க மாட்டார்கள். இப்பொழுது அந்தமாதிரி "கட்டிடத்தை" உயர்த்துவதால் இன்று நாம் அடையப்போகிற பலன் என்ன? நாடு அல்லோல கல்லோலப் பட்டுக்கொண்டு தானிருக்கும். இந்தப் பாரத தேசத்தில் வர்ணிக்க வேண்டுமானால் ஒருவன், "பஞ்சத்தை"த்தான் வர்ணிக்கமுடியும்.

அதை மறுக்கிறார்கள் ஒரு கூட்டத்தார். அந்தக் கூட்டத்தாருக்கு வயிற்றில் பசி கிடையாது. சொப்பனத்திலும் பட்டினி கிடையாது அவர்களுக்கு. ஆனால், "புட்டியிலே பசி" என்றுதான் சொல்ல வேண்டும். ஒரு நிமிடத்தில் "போனில்" பேசி 'ஒரு மூட்டைக்கு ரூ. 3 வீதம், போடு பத்தாயிரம் மூட்டை'யென்று 30000 ரூபாயை அப்படியே "பேங்கில்" போடும் முதலாளி மனப்பான்மை யுடைய

வர்களுக்குப் பசி கிடையாது. மக்கள் வயிற்றுக்கு உணவு இல்லை யென்று 'ஆலா'ப்பறக்கையில், ஐயோ! இந்தக் கொடூர "கொளான் கள்" ஒரு கோட்டை நெல்லை 40 ரூபாய்க்குக் கூசாமல் விற்ற இரக்க மற்ற பாவிகளல்லவா? இங்கே அரை வயிற்றுக் கஞ்சிக்கு "லாட்டரி" அடிக்கும்பொழுது அங்கே (எங்கே என்பதை நீங்களே தெரிந்து கொள்ளலாம்) மூட்டை மூட்டையாக்க் கண் "ஜொலிக்கும்" படி அடுக்கிவைத்துப் புழுங்கி நாசமாகப்போன சங்கதியை யாரிடம் சொல்லி அழுவது? இயற்கை யன்னையின் திருவிளையாட்டல்தான் இந்தத் தினுசிலெல்லாம் நடக்கிறதோ என்று எத்தனை அப்பாவி கள் எண்ணுகிருர்கள்? மாதம் இரண்டு ஏகாதசிதான் "காலண் டரில்" வருகிறது. ஆனால் நம் மக்கள் மாதம் எத்தனை 'ஏகாதசி விரதம்' இருந்து தொலைக்கவேண்டியிருக்கிறது என்பது "பசி வந்தவர்" களுக்குத்தானே தெரியமுடியும். அதே சமயத்தில் அண்டை வீட்டிலிருக்கும் ஆசாமியின் அசீர்ணத்தால் "ஆயுர் வேத பொக்கிஷமே" காலியாகி விட்டதாம். இதுவும் எனையாளும் ஈசன் செயல்தானோ என்று ஏமாந்த சோணகிரிகள் சொல்லி விட்டுப்போகிருர்கள். இந்தக்கோரமான நிலைமையை ஆதியில் மனிதன் சிருஷ்டித்து விட்டான். மனிதன் செய்கிற கொடுமை களுக்கு மனிதன்தான் ஜவாப்தாரி. கண்ணுல் காண முடியாத "கற்பனை வாதி"யைச் சாட்டி இந்த உலகத்திலே இனி எந்த மனிதனும் தப்பி விடமுடியாது.

தெருவிலே, "ஐயா! மவா ராசாவர் யிருக்கணும், கொஞ்சம் சாதம் போடுங்கதாயே" என்ற ஒரு குரல் தன் ஈனஸ்வரத்தை மீட்டிக்கொண்டிருக்கிறது. ஆனால்.........மலர் தூவிய பஞ்சணை யிலேயே படுத்துறங்கும் "பாக்கியவானுக்கு" இது எரிச்ச லூட்டு கிறது. "அவன் முதுகிலே போடு இரண்டு" என்று நையப் புடைத்தும் விடுகிருன், அந்த ஏழை சொரூபத்தை, இந்த நிலை மையை இன்று பிரத்தியட்சமாகப் பார்க்கும் நிலையிலன்றோ நாமிருக்கிறோம்! இதைத்தான் அந்தக்காலத்திலேயே தீர்க்க தரிசியாக உணர்ந்திருந்தார் ஒரு புலவர். அவர்தான் வேத நாயகம் பிள்ளை. அவர் என்ன நீதியைச் சொல்கிருர் பார்க்கலாம்:

"அருந்தவே கூழும், பூண
ஆடையும், வீடுமின்றி
வருந்துவோர் எண்ணிலார்நம்
மருங்குளார் என அறிந்தும்,
விருந்திடாய், மணி மாடத்து
மேவிநீ யொருவன் வாழப்
பொருந்தினய், மனமே! மக்கட்
போலிநீ விலங்கா ஞயே!"

நீ மனித உடல் என்னமோ எடுத்திருக்கிறது உண்மைதான். ஆனல் மிருகம் நீ. ஏனென்றல் இப்படிப்பட்ட இரக்க மற்ற நெஞ்

சிலை யுடையவனிடம் 'பஞ்சம்' 'பசி' என்ருல் எட்டி உதைக்கத்தான் செய்வான். அது மட்டுமா "பஞ்சமாம், பஞ்சம், சாகமாட்டாமே, எங்கேயும் குளத்திலே போய் விழவேண்டியதுதானே; நல்ல தடிமாட் டுட்டமா வாரானுக, உழைத்துச் சாப்பிடணும்" என்று அப்படியே, நீதிபதிகளெல்லாம் கெட்டாம்கேடு என்று பேசித் தள்ளிடுவான். இது நாம் அனுபவிக்கவேண்டிய விதி என்று மூலையிலே முக்காடு போட்டுக்கொண்டு அழுதுகொண்டிருக்க முடியாது. நிலைமையை மாற்றி யாகவேண்டும் என்பதை நாம் உணர வேண்டும். கொடுமைகளின் வளர்ச்சி கண்டிப்பாய் அமைதியின் சொரூபத்தைத் தரிசித்தே தீரும். சும்மா கை கட்டிக்கொண்டு "சிவனே" என்றிருந்தால் "குண்டர்கள்" கொழுத்து விடுவார்கள். ஒற்றுமையின் சக்தியை உணர்ந்து நாமனைவரும் ஒன்று திரள வேண்டும். ஏன்? பஞ்சம் நமக்குத்தான். வேறுயாருக்குமில்லை. நம்மைக் காட்டிலும் உயர்ந்தவர்களும் கிடையாது; குறைந்தவர்களும் கிடையாது. நான் சொல்லவில்லை. வேத நாயகம் பிள்ளை சொல்லுகிருர்:

"ஒளி முடி யொடும் பிறந்தே
உலக மாண்டவரு மில்லை;
எளிய ராய் ஓடொன்றேந்தி
இங்குதித் தவருமில்லை;
குளிர் கட லுடுத்த பாரில்
குறைந்தவர் மேலோர் என்றல்
வெளி மயக்கன்றிச் சற்றும்
மெய்யல, உணர்வாய் நெஞ்சே."

உணர்ந்து விட்டோமென்றே நினைக்கிறேன்.

---

## சந்தா நேயர்கள் கவனிக்க

நமது சந்தாதாரர்களில், சிலர் நமக்குக் கடிதம் எழுதும் பொழுது அவர்களுடைய சரியான சந்தா நெம்பரைத் தெரிவிக்காமல், தவருன சந்தா நெம்பரைக் குறிப்பிட்டு எழுதி நமக்கு மிகவும் கஷ்டத்தைக் கொடுக்கிருர்கள். ஆகையால் அவர்கள் இனிமேலாகிலும் இவ்விதத் தவறு நேராமல் கவனித்து எழுதினல் உடனே பத்திரிகைகள் அனுப்பிவைக்கப்படும்.

**மானேஜர்.**

கடைக்காரர்களே இப்படித்தான். நம் கண்ணெதிரில் மிகவும் அன்போடும் ஆதரவோடும் பேசுவார்கள். நாமும் அதைக் கண்டு மகிழ்ந்துபோய் விடுவோம். ஆனால் திரை மறைவில் அவர்கள் நம்மை எவ்வளவு மதிப்பில் வைத்திருக்கிறார்கள் என்பதற்கு இந்த 'ஜவுளிக்கடை ஜம்புலிங்க'மே சாட்சி.

# ஜவுளிக்கடை ஜம்புலிங்கம்

பி. சுப்பிரமணியன்



ஜவுளிக்கடை ஜம்புலிங்கம் என்றால் மதுரையில் சர்வ பிரசித்தம். சிறு குழந்தை முதல் பெரிய விருத்தர் வரை எவராயினும், ஜம்புலிங்கம் வீட்டுக்கு வருகிறான் என்றால் மிகவும் அன்போடு தான் அவனை வரவேற்பார்கள். ஏனென்றால் ஜம்புலிங்கம் யார்யாருடன் நெருங்கிப் பழகுகின்றானோ அவர்களிடம் எல்லாம் ரொம்பவும் அந்யோன்யத்துடன் நடந்து வந்தான். அவனை யார் வைதபோதிலும் சரி, அல்லது கோபித்தபோதிலும் சரி, சிறிதும் கோபம் என்பதே அவன் முகத்தில் தோன்றாது. அவனுடைய ஒரே இலட்சியம் என்னவென்றால், அவன் யாரை விரும்பிப் போகின்றானோ அவரிடம் தான் வந்த காரியத்தை எவ்விதத்திலும் சாதித்துக் கொள்ளவேண்டும் என்பது தான்.

ஜம்புலிங்கத்திற்கு மதுரையிலிருக்கும் மன்னார்சாமி அய்யங்கார் ஜவுளிக்கடையில் பணம் வசூல் செய்யும் வேலை. மன்னார்சாமி அய்யங்கார் தன் கடைக்கு ஜவுளி வாங்கவரும் எல்லோருக்கும் கடனுக்கு கொடுத்துவிட்டு, ஜம்புலிங்கத்தைத்தான் அவர்களிடம் பணம் வசூலித்து வர அனுப்புவது வழக்கம். மேலும் அவர் கடையில் வியாபாரம் அதிகமாய் நடைபெற்று வந்ததற்குக் காரணம் அவர் கடனுக்கு ஜவுளி கொடுத்து வந்ததுதான். இதனால் மதுரையிலுள்ள பெரும்பாலான மக்கள் அனைவரும் மன்னார்சாமி அய்யங்கார் ஜவுளிக்கடையைத் தேடிவந்து ஜவுளிகள் வாங்கிச் சென்று கொண்டிருந்தார்கள்.

இதுவும் தவிர, ஜம்புலிங்கத்தின் மீதுள்ள அபிமானத்தினாலும் பலர் அவர் கடைக்கு வந்து வியாபாரம் செய்யலானார்கள். மன்னார்சாமி அய்யங்கார் கடையில் குமாஸ்தாக்கள் பலர் இருந்தபோதிலும் அவருக்கு ஜம்புலிங்கத்தின் மீது அலாதியான வாஞ்சை. இருந்தாற்போலிருந்து அவருக்குக் குஷி பிறந்துவிட்டதானால் "ஜம்புலிங்கம்! ஏன் இன்றைக்கு ஒரு மாதிரியாய் இருக்கே? உடம்புக்கு ஏதேனும் அசௌகர்யமா? வேலையோடு வேலையாய் உடம்பையும் கவனித்துக்கொள்ள வேண்டுமடா! இந்தாபோய் காப்பி சாப்பிட்டு வா. அப்பொழுது தான் கொஞ்சம் சுறுசுறுப்பா யிருக்கும்" என்று கூறி நான்கணா சில்லறையை எடுத்துக் கொடுப்பார்.

இன்னொரு சமயம் கொஞ்சம் கோபமா யிருந்தால், "ஏண்டா ஜம்புலிங்கம்? உனக்குக் கொஞ்சமாவது மூளை இருக்கா இல்லையா?

நீ பாட்டிற்கு நினைத்த வேளைக்கு வருகிறே, போகிறே! இப்படியிருந்தா என்னமாடா வியாபாரம் செய்யறது? கடையா லட்சணமா, காலா காலத்தில் வந்து வேலையைச் செய்தோம் என்ற நாளே கிடையாது. வெளியிலே ஏகப்பட்ட பாக்கி நிற்கிறது. சீக்கிரம் போய் வசூல் பண்ணிக்கொண்டு வாடா'' என்று சரமாரியாகப் பேசத் தொடங்கி விடுவார்.

இவ்விதம் இவர் கோபிப்பதெல்லாம் அந்த நேரத்திற்கு மட்டும் தான். ஜம்புலிங்கம் வெளியே சென்று கொஞ்சம் பணம் வசூலித்து வர வேண்டியதுதான் தாமதம், அய்யங்காரின் கோபம் எல்லாம் சந்தோஷமாக மாறிவிடும். உடனே அவர் ஜம்புலிங்கத்தைத் தட்டிக் கொடுத்து "ஜம்புலிங்கம்! இன்று காலையிலே நான் உன்னைக் கோபித்தது எதற்காக என்று தெரியுமோ? நீ அப்பொழுது தான் விரைவாய்ப் பணங்களை வசூலித்து வருவாய் என்ற எண்ணத்தினால் தான். நீ எப்பொழுதும் காரியத்தில் கெட்டிக்காரனடா! இருந்தாலும் நீ கடைக்கு நாழி கழித்துவரும் அந்த வழக்கத்தை விடமாட்டேன் என்கிறாய். அதனால் என்ன? பரவாயில்லை. நீ நாளைக்கு, இன்றைக்கு வசூலித்து வந்த பணத்தைக் காட்டிலும் அதிகமாகவே வசூலித்து வரவேண்டுமடா! ஞாபகம் இருக்கட்டும்'' என்று அவனை முகஸ்துதி செய்வார்.

அன்று ஞாயிற்றுக்கிழமையாதலால் எனக்கு ஆபீஸ் இல்லை. ஆகவே மன்னார்சாமி அய்யங்கார் கடைக்குச் சென்று ஏதேனும் வேஷ்டிகள் வாங்கி வரலாமென்ற எண்ணத்துடன் புறப்பட்டேன். மன்னார்சாமி அய்யங்கார் கடையில் நான் ஜவுளி வாங்கக் குறிப்பாய்ச் சென்றது கடனுக்காக அல்ல என்பதைத் தெரிவித்து விடுகிறேன். அய்யங்காரும் நானும் வெகு நாளைய சிநேகிதர்கள். மேலும் நான் அவர் கடையில் எந்த சாமான் வாங்கினாலும் உடனே ரொக்கம் கொடுத்து விடுவேன். அப்படியிருக்க நான் அய்யங்கார் கடையை நாடிச் சென்றதின் நோக்கம் என்ன என்ற சந்தேகம் வாசகர்களுக்கு உதிக்கலாம்.

நான் அய்யங்கார் கடைக்குச் செல்வதெல்லாம், அவருடன் சிலமணி நேரங்கள் உல்லாசமாய் பேசிப் பொழுது போக்கி வரலாம் என்ற உத்தேசத்துடன் தான். அவரும் என்னுடன் எவ்வித விகல்பமுமின்றி ரொம்பவும் சரளமாகவே பேசுவார். எங்கள் இருவருக்குள்ளும் நடக்கும் சம்பாஷணைகளில் சம்பந்தப்படாத விஷயங்கள் ஒன்று கூட இவ்வுலகில் இராதென்றே நிச்சயமாய்க் கூறி விடலாம். இந்து முஸ்லிம் பிரச்சினை முதல் இத்தாலியர்களின் ஓட்டப்பந்தயம் வரை எல்லா விஷயங்களும் எங்களால் பரிசீலனை செய்யப்பட்டு முடிவுக்கு வந்து விடும்.

நான் மன்னார்சாமி அய்யங்கார் கடையை அடைந்த சமயம் அய்யங்கார் ஜம்புலிங்கத்தோடு ஏதோ இரைந்து பேசிக் கொண்டிருந்தார். கடையில் உள்ளே சற்று நாகரீகமாக உடை தரித்த ஓர் கனவான் முகத்தைச் சுளித்த வண்ணம் அய்யங்கருக்கு அரு

கில் அமர்ந்திருந்தார். நான் கடையினுள்ளே கால் எடுத்து வைத்ததும் அய்யங்கார் என்னை நோக்கி "சார் சுப்ரமண்யம்! வர வேண்டும்! ரொம்ப நாளாய் உங்களைக் காணவே முடியவில்லையே! எங்களை மறந்து விட்டீர்கள்போலிருக்கிறது" என்று பரிவாய்க் கூறினார்.

உடனே அருகிலிருந்த கனவான் ரொம்பவும் ஆக்ரோஷத்துடன், "ஆமாம் ஐயா! உங்கள் கடையில் ஒருதரம் பேரம் செய்தவன் மறுதட்வை திரும்பிவந்து பேரம் செய்ய நீங்கள் தான் இடம் கொடுப்பதில்லையே! அப்படி இருக்க எவன் ஐயா உங்கள் கடையைத்தேடி வரப் போகிறான்?" என்று வெறுப்புடன் கூறினார்.

அய்யங்கார் அவரின் முகவாக்கட்டையைத் தாங்கி, "கிருஷ்ணய்யர்! நீங்கள் கோபித்துக் கொள்ளக்கூடாது. ஏதோ தவறுதலாய் இந்த தடவை பிசகு நேர்ந்து விட்டது. நீங்கள் அதை மனசில் பாராட்டாமல் நம்ம கடையைத் தொடர்ந்து ஆதரிக்க வேண்டும்" என்று கெஞ்சினார்.

கிருஷ்ணய்யர் இதைக் கேட்டதும் முன்னிலும் அதிகமாய்க் கோபம் கொண்டு என்னை நோக்கி, "சார்! நீங்கள் தான் சொல்லுங்கள்! இந்த மன்னார்சாமி அய்யங்கார் கடையில் ஜவுளிகள் வாங்கிக் கொண்டுபோய் இன்னும் பத்து நாட்கள் கூட ஆகவில்லை. அதற்குள்ளாக ஐந்து ஆறுதடவை ஜம்புலிங்கத்தைப் பணம் வசூலித்து வர என் வீட்டுக்கு அனுப்பி விட்டார். இப்படி ஜவுளிகள் கொடுத்த மறுநாளே பணத்தைக் கொடுக்கும்படி கேட்டால் எவன் ஐயா இவர் கடையில் தொடர்ந்து வியாபாரம் வைத்துக்கொள்வான்?" என்று கர்ஜித்தார்.

நானும் அவரைச் சாந்தப்படுத்த எண்ணி "சார்! ஜவுளிக் கடைக்காரர்களுக்கு இது சகஜம் சார்! தங்கள் கடையிலுள்ள ஜவுளிகளை விற்கும்போது ரொம்பவும் நயமாகப் பேசி விடுவார்கள். பின்னால் பணம் வசூலிக்க வரும்போது கொஞ்சம் மிரட்டலைக் காண்பிக்கத் தொடங்கி விடுவார்கள். இதனால்தான் சார் நான் எந்த ஜவுளிக்கடையில் பேரம் செய்தாலும் கடனுக்கு வாங்குவதே இல்லை. உடனே ரொக்கத்தைக் கொடுத்து விட்டால் இந்தத் தொந்திரவுகள் எல்லாம் ஏற்படாதல்லவா?" என்று கூறினேன்.

நான் இவ்விதம் கிருஷ்ணய்யரைச் சமாதானப்படுத்தியதுதான் தாமதம். மன்னார்சாமி அய்யங்கார், புன்சிரிப்பு முகத்தில் ததும்ப "கிருஷணய்யர் சார்! நீங்கள் இனிமேல் ஒன்றுக்கும் கவலைப்பட வேண்டாம். உங்கள் இஷ்டம்போல் ஜவுளி எடுத்துக்கொண்டு போய், என்றைக்கு வேண்டுமானாலும் பணம் கொடுக்கலாம். இந்த ஜம்புலிங்கத்தை நான் கண்டித்து விடுகிறேன். இனிமேல் அவன் உங்கள் வீட்டிற்கு வரவே மாட்டான்" என்று கூறி ஜம்புலிங்கத்தைக் கூப்பிட்டார். ஜம்புலிங்கம் அய்யங்கார் எதிரில் பயந்த வண்ணம் வந்து நின்றதும் அவர், "ஏண்டா ஜம்புலிங்கம்!

உனக்கு எத்தனை தடவை சொன்னாலும் கொஞ்சம் கூடப் புத்தியே கிடையாது. நான் நான் கிருஷ்ணையர் வீட்டுக்குச் சென்று பணம் கேட்கவேண்டாம் என்று தினந்தோறும் சொல்லு கிறேனே. எதற்காகடா அவர் வீட்டிற்கு அடிக்கடி சென்று பணம் கேட்கிறாய்? உன்னாலே என் வியாபாரமே தொலைஞ்சு போய் விடும்போ லிருக்கே. நீ இனிமேல் எல்லோரிடமும் இப்படி நடந்து கொள்ளும் பட்சத்தில் வேலையை விட்டு நின்று விடலாம். உன்னாலே எல்லாரிடமும் பேச்சுக் கேட்க வேண்டியிருக்கிறது. மடையன்! யார் யாரிடம் எந்தெந்த விதமாய் நடந்து கொள்ள வேண்டும் என்பது கொஞ்சம் கூடத் தெரியவில்லை. உள்ளே போடா முட்டாள்" என்று கண்டித்ததும் கிருஷ்ணய்யர் சிறிது திருப்தி அடைந்தவர்போல் காணப்பட்டார்.

அன்று ஜம்புலிங்கத்தைக் கண்டித்ததனால், அய்யங்கார் கடையில் கிருஷ்ணய்யர் மேற்கொண்டு ரூபாய் ஐம்பதிற்கு ஜவுளி கள் வாங்கிச் சென்றார். அவர் சென்றதும் நான் ஜம்புலிங்கத்தை நோக்கி, "ஜம்புலிங்கம்! நீ என்ன கடன்காரர்களை எல்லாம் இப் படி விரட்டுரே! அவர்களை ரொம்பவும் கண்டித்தால் பிறகு அவர் கள் உங்கள் கடையை நாடிவந்து வியாபாரம் செய்ய வேண் டாமா? கொஞ்சம் அமைதியாய் இருந்து, சாமர்த்தியமாய் அவர் கள் மனம் நோகாமல் பணங்களை வசூலிக்க வேண்டும்; அதை விட்டு ரொம்பவும் துரத்தினால் உங்கள் கடைக்கே ஒருவரும் வர மாட்டார்கள்" என்று புத்திமதி கூறினேன்.

நான் இவ்விதம் கூறி முடித்ததும் ஜம்புலிங்கம், "சார்! உங்க ளிடத்திலே உண்மையைச் சொல்வதினால் எவ்வித குற்றமும் ஏற்படாதென்றே எண்ணுகிறேன். பாருங்கள்! எங்கள் கடை யிலே இதுமாதிரி சம்பவங்கள் நடப்பது சர்வ சாதாரணமாய்ப் போய்விட்டது. நாங்கள் இதை எல்லாம் சிறிதும் பொருட் படுத்துவதே இல்லை. எங்கள் முதலாளி என்னை வைது கண்டிப் பதற்கு ஒரு கணக்கே இல்லை. எல்லாம் வியாபார தந்திரங்கள். எங்கள் கடையில் கடனுக்கு ஜவுளிகள் வாங்கிச் செல்பவர்களிடம் சரக்குக் கொடுத்த அடுத்தவாரமே பணம் வசூலித்துவரும்படி எங்கள் முதலாளி உத்திரவு இட்டுவிடுவார். நானும் அதன் படியே அவர்கள் வீட்டுக்குச் சென்று கண்டித்துப் பணம் கேட் பேன். ஜவுளி வாங்கிச்சென்றவர்கள் நான் பணத்திற்குக் கண்டிப பதைக்கண்டு எங்கள் முதலாளியிடம் நேரில் வந்து இன்று நடந்ததைப்போல் ஏதேனும் குறை சொல்வார்கள். உடனே எங்கள் முதலாளி அவர்களின் வார்த்தைகளுக்கு மதிப்பு கொடுப் பதுபோல் என்னைக் கண்டபடி வைது பயமுறுத்துவார். நானும் அவர் வசவுகளை வாங்கிக்கொண்டு ஒன்றும் பதில் கூறாமல் மௌனம் சாதிப்பேன். வந்தவர் சமாதானம் அடைந்து பணத் தைக் கொடுத்துவிட்டுச் செல்வார். இது எங்கள் கடையில் தினந்தோறும் நடக்கும் வேடிக்கை. இதற்கு நானும் எங்கள் முதலாளியும் முன் கூட்டியே ஏற்பாடு செய்து கொள்வோம்.

நீங்கள் எப்பொழுதும் எங்கள் கடையில் ரொக்கத்திற்கே ஜவுளிகள் வாங்குபவர்களாகையால் உங்களிடத்திலே இந்தச் சமாசாரத்தைச் சொல்லலானேன்." என்று கூறிமுடித்தான். அய்யங்காரும் ஜம்புலிங்கம் கூறிய மொழிகளை அப்படியே ஆமோதித்தார். எனக்கும் நேரம் ஆகிவிட்டபடியால் வந்த காரியத்தை முடித்துக்கொண்டு வீட்டை நோக்கிச் செல்லலானேன்.

இது நடந்து இரண்டு தினங்கள் கூடச் சென்றிருக்காது. ஒரு தினம் காலை ஜம்புலிங்கம் நான் வசித்துவரும் வீதியின் வழியாகப் போய்க்கொண்டிருந்தான். நான் அவனை வழி மறித்து "ஜம்புலிங்கம்! ஏது காலை வேளையிலே இப்படிக் கிளம்பினை! ஏதேனும் அவசர ஜோலியோ"? என்று கேட்டேன்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. இரண்டு தினங்களுக்கு முன்பு நீங்கள் எங்கள் கடைக்கு வந்திருந்தபோது, கிருஷ்ணையர் என்ற ஒருவர் ஜவுளிகள் வாங்கிச்சென்ருர் அல்லவா? அவர் வீடு அடுத்த தெருவில் இருக்கிறது. அவரிடம் சென்று பாக்கி வசூலித்துவரப் புறப்பட்டேன்".

"அட பாவி! அவர் உங்கள் கடையில் ஜவுளிகள் வாங்கிப் போய் இரண்டு தினங்கள்கூடச் சரியாக ஆகவில்லை. அதற்குள் ஏன் அவரிடம் பாக்கி கேட்கப் புறப்பட்டுவிட்டாயே! ரொம்ப நன்ருயிருக்கிறது!"

"சார்! நான் என்ன பண்ணட்டும்? எங்கள் முதலாளி என்னை விரட்டுகிருரே." என்று கூறியதும் அவனை மேலே செல்ல விடுத்து வீடு திரும்பினேன்.

ஆனல், ஒரு முக்கியமான விஷயம். மன்னுர்சாமி அய்யங்கார் சொல்லுகிருர், "சார்! என்னல்தான் சார் ஜம்புலிங்கத்திற்குப் பிழைப்பு நடக்கின்றது. என் கடையை விட்டால் இந்த ஊரிலே எவருமே அவனை வேலைக்கு வைத்துக் கொள்ள மாட்டார்கள்" என்று.

ஆனல் ஜம்புலிங்கம் என்ன சொல்லுகிருன் தெரியுமா? "சார்! இந்த ஜம்புலிங்கம் இல்லாவிட்டால் மன்னுர்சாமி அய்யங்கார் கடையில் வியாபாரமே நடக்காது சார்! அய்யங்கார்பேருக்குத்தான் முதலாளியே ஒழிய, கடைக்காரியம் முழுவதும் என்னல் தான் சார் நடக்கிறது." என்று மார் தட்டிக் கூறுகிருன்.

வாஸ்தவம்! இருவர் கூறுவதும் முற்றிலும் உண்மையே.

திவான்பகதூர் ஆவுடையப்ப பிள்ளையின் அச்சேறாத—ஆனால் சபையேறிய கிறள் திருநெல்வேலி வாசிகளால் நன்கு ரஸிக்கப் பெற்றது. அந்த ஹாஸ்யத் 'தமிழ் மறை'யின் ஒரு பாடலை விரிவுரையுடன் இங்கே விளக்கி யிருக்கிறார் உரையாசிரியர் ர. பா. மு. கனி.

# மாந்தர் நிலை

ர. பா. மு. கனி



மிகுந்த வருத்தத்தோடு குனிந்த தலை நிமிராது குந்தி இருந்தான் என் விறகு வெட்டித்தோழன். "நண்பனே, வருத்தமென்ன?" என்று அன்பாகக் கேட்டேன். "இதென்ன உலகம்! எல்லாம் பணத்தை வைத்து நடக்கவேண்டி யிருக்கிறது. பண மில்லாதவன் பிணம்? ஆமாம், நான் பிணந்தான். பிணமாகப் போகத்தான் ப்ளான்போடுகிறேன்" என்று நொந்த மனவலியை வெளிப்படுத்தினான்.

நான் திடுக்கிட்டேன். நண்பனை எப்படித் தேற்றுவதென்று தெரியவில்லை "ஏனப்பா, இப்படி யெல்லாம் பேசுகிறாய்? மனதைத் திடப்படுத்து" என்றேன்.

"திடப்படுத்தியதனால் தான் இந்த முடிவுக்கு வர முடிந்தது. கடவுளாம், என்ன கடவுள்? பணக்காரன் கடவுள்! கடவுள் என்று ஒருவன் இருந்தால், அந்த ஓர வஞ்சகக்கடவுளை என்ன தான் செய்யக்கூடாது? ஸர். சச்சிதானந்தத்தையும் அவன்தான் படைத்தான். என்னையும் அவன்தான் படைத்தான் என்றால் அந்த சர், அப்படிப் பீதாம்பர மணிந்து, சொகுசாய் உண்டு சுற்றிச் சோபாவில் சாய்வானேன்? நான் இப்படிக் கோவணாண்டியாய், கூழுக்கும் வழியின்றிக் கோடாலி பிடித்து வெட்டிக் குடிசையின்றிக் குன்றி நிற்பானேன்? சீ, இதென்ன உலகம், மனிதனுக்கு மனிதன் வேறுபாடா, உயர்வு தாழ்வா?" என்று விரக்தியோடு பேசினான் தோழன்.

அவன் பேசிக் கொண்டிருக்கும்போதே கிறள் ஆசிரியர் ஆபத் சகாயராய் வந்து சேர்ந்தார் என் துணைக்கு—நேரிலல்ல என் மனதில் தான். அவர் கிறள் நினைவு பெற்றது. நான், "ஏனப்பா இப்படி எல்லாம் பேசுகிறாய்? கவலையை விட்டு உன் தொழிலைப்பார். பற்று நீக்கித் தொழிலில் ஈடுபடுபவனே வீரன் என்கிறது கிதை. நீயும் சர். சச்சிதானந்தமும் உயர்வு தாழ்வாக இருப்பதற்கு இறைவனைத் திட்டாதே. அவன் கருணாகரன். தன் சிருஷ்டிகளை எல்லாம் ஒரே மண்ணால் தான் படைத்தான். யாவருக்கும் சதையையும் இரத்தத்தையும் ஒரே விதமாக இருக்கும்படி செய்தான். பரம தயாளுவான பகவான் என்ன

செய்வான்? இதோ பார், ஒரு குயவன் ஒரே இடத்தில் மண் எடுத்துக் குழைக்கிறன். கலயங்கள் செய்கிறன்; எத்தனேயோ கலயங்கள். எல்லாம் ஒரே அளவு. ஒன்றைப்போல் ஒன்று. செய்த கலயங்களேச் சூளேபோட்டு வேகவைக்கிறன். வெந்த பின் வெளியே எடுக்கையில் சில நொறுங்கி விடுகின்றன. சில புகைப்பிடித்துப் போகின்றன. மற்றவற்றை விற்கிறன். யார் யாரெல்லாம் வாங்குகிருர்கள்? சீமான் முதல் சின்னன் வரை பலர் வாங்குகிருர்கள். எல்லாம் ஒரே விலே. சீமான் வாங்கிய கலயத்தில் பூ வேலேகள் செய்து அழகு பார்க்கிருர்கள். அல்லது சுபகாரியத்தை உத்தேசித்து அதில் பால் ஊற்றி வைக்கிருர்கள். சின்னனே! பொங்கும் கள்ளேக் கலயத்தில் வாங்கி ருசி பார்க்கிறன். இவர்கள் இருவருக்கும் இடையில் உள்ள பலர் தாம் வாங்கும் கலயங்களேப் பல காரியங்களுக்கு உபயோகிக்கிருர்கள். பழனி, வெள்ளேயடிக்கச் சுண்ணும்பை அதில் கரைக்கிறன்; பாவநாசம், மருந்தில் பூசக் கிலெண்ணேயை அதில் காய்ச்சுகிறன். கருப்பாயி அதைக் கஞ்சிக்கலய மாக்குகிறள்; ராம நாடான் இனிய பதனீர் இறக்க உபயோகிக்கிறன். இப்படி ஒரே குயவன் கையால் செய்த ஒரே விதக் கலயங்கள் எப்படி அந்தஸ்தில் உயர்வு தாழ்வு பெறுகின்றனவோ, அதுபோல் ஒரே குயவனை கடவுளால் வனேயப் பெற்ற கலயங்களான மனிதர்களும் அந்தஸ்தில் உயர்வு தாழ்வு உடையவர்களாக இருக்கிருர்கள். தேர்மா, இந்த நிலேகண்டு நீ மலேக்கலாமா? களிமண் கலயங்களே நினேத்தாவது மனம்தேர். இந்தக் குறளே வேண்டுமாளுல் துணேயாகக் கொள்'' என்று இக்குறளேச் சொன்னேன்:

*மலேவதேன் மாந்தர் நிலேக்குக் குயவன்*

*[1] கலயமே சாலுங் கரி.* [[1] பூமன் என்றும் ஒரு பாடம். கரி—சாட்சி.]

ஞானேதயம் பெற்றவன்போல் துள்ளி எழுந்தான் தேர்மன்; கோடாலியைத் தூக்கித் தோளில் போட்டான். விட்டான் நடையை.

[குறள், டி. கே. சி. யின் பிரதமசீடர் என்று சொல்லப்படும் திவான் பகதூர் ஆவுடையப்ப பிள்ளே அவர்களுடையது. விளக்கம் என்னுடையது.]

---

## முன்னேற்றம்

பையன் தகப்பனர்:—நம்ம பையன் பரீக்ஷையிலே மார்க் எப்படி வாங்கி யிருக்கிறன்? போன பரீக்ஷையைவிட இதில் முன்னேற்றம் அடைந்திருக்கிருனு?

ஆசிரியர்:—போன பரீக்ஷையில் நூற்றுக்கு பூஜ்யம் வாங்கினன். இந்தப் பரீக்ஷையில் ஐம்பதுக்கு பூஜ்யம் வாங்கி யிருக்கிறன்.

—ரா. பரமதயாளு.

" பாரதியே! வீர மெங்கும் போகவில்லை;
நேரமது நேர்தலுறப் பரிணமிக்கும்."

# என் தாய் நாடே!

" பாரத சக்தி "



என்னருமைத் தாய் நாடே! உன்னிடத்தில்
எவ்வளவோ சக்தியுண்டு; புதுமையுண்டு;
பொன்னென வோர் கொள்கையுண்டு திட்டமுண்டு;
புதுமை பெற்ற தொண்டர்களு மநேகருண்டு. (1)

மூ[illegible]லாத்த தியாகிகளு மிருக்கின்றார்கள்;
முயற்சியுள்ள வீரர் பல ரிருக்கின்றார்கள்;
அஹிம்சை யுயர்வீரருடன் அச்ச மற்ற
அசையாத உள்ளமுள்ளோர் இருக்கின்றார்கள். (2)

இன்னிலையோர் பலரிருக்க என் தாய் நாடே!
இன்னும் தளைப்பட்டிருக்கும் விந்தை யென்னே!
வன்கண்ணர் ஜெயச்சந்த்ரன் உமிர்சந்த் போன்ற
வயத்தர்களும் துரோகிகளும் இருப்பதாலோ? (3)

தளைப்பட்ட உனக்காகத் தவிட்டையுண்டு
தையல்மிகு கந்தையையும் அணிந்து கொண்டு
களைத்தாலும் இன்பமெல்லா மெறிந்து விட்டு
கருமமே யாற்றிடுவேன் உரிமைக்காக. (4)

என்னுன்மா இவ்வுடலைப் பிரிந்தாலும் என்?
என்னருமை நாட்டினின்றும் பிரிப்பர் யாரோ?
என்றேனும் ஓர் நாளில் என்றன் ஆன்மா
இவ்வுடலைப் பிரியுமெனும் உண்மை சூழ்ந்து, (5)

மனத்துடனே வாக்காலும் காயத்தாலும்
மாசுபட விசித்த நின்றன் தளையறுப்போம்.
இன முணர்வு பெற்றிடவும் எம நாட்டிற்கே
இன் னுயிரை ஈந்திடவும் பின் வாங்கோமே. (6)

பாரதத்தின் பண்டைய நல் வீரங் கேட்கும்
பாரதியே! வீர மெங்கும் போகவில்லை;
நேரமது நேர்தலுறப் பரிணமிக்கும்;
நித்தியமும் பணி செய்வேன் உயிரைக் கொண்டே. (7)

பிரெஞ்சுப் பாஷையில் தன்னிகரற்ற நவீனங்களையும், கதைகளையும் சிருஷ்டித்த பேரறிஞர் 'விக்டர் ஹ்யூகோ. அவன் எழுதிய, லே மிஸரபிள்' என்ற நவீனம் உலகப் பிரசித்தி பெற்றது. ஏழைகளுக்கு இரங்கி உணர்ச்சி மீறிடும் வறுமைச் சித்திரங்களைத் தீட்டும் இந்த அருங்கலைஞன் எழுதிய கட்டுரையின் சில பகுதிகளை, அழகாக மொழிபெயர்த்துத் தந்திருக்கிறார் திரு. 'மதியழகன்.'

# செல்வர்களுக்கு ★

விக்டர் ஹ்யூகோ ★

தனிகர்களே! உலகத்துப் பாக்கியவான்களே! நீங்கள் கொண்டாடும் மாரிக்காலத்து விழாவிலே, நீங்கள் களிக்கும் நடனசாலையிலே உங்களைப் பொலிவு படுத்துகின்றன, அங்கு அமைந்திருக்கும் விளக்குகள். எம்மருங்கும், உங்கள் பாதங்களைச் சுற்றிலும், பளிங்குக் கற்களும் கண்ணாடிகளும் பிரகாசிக்கின்றன; ஒளிவிடுகின்றன. இவ்வளவும் சிறப்புற்றொளிரும் அவ்விடத்தில் விருந்தினர்களுடன் கேளிக்கையும் நடனமும் புரிகின்றீர்கள்; அருமையான பாடல்களையும் பாடுகின்றீர்கள்.

ஆனால் ஒருவனைப் பற்றி நீங்கள் அந்தச் சமயத்தில் நினைப்பதுண்டோ? சிந்திப்பதுண்டோ? அந்தத் துரியான் யார்? அவனே ஒரு ஏழை; பரம ஏழை; பசிப்பிணியின் வாய்ப்பட்ட ஏழை. அவன் என்ன செய்கிறான்? நிழல் நிறைந்த சந்துகளில் நின்று கொண்டு, பொன்மயமாய் விளங்குகின்ற உங்கள் பங்களாவின் சன்னற்கண்ணாடியின் வழியாக, ஒளிர்கின்ற விளக்கின் பிரகாசத்தைத் தன் ஒளியிழந்த கண்ணால் காண்கிறான். தரித்திரத்திலாழ்ந்த அவன் நிற்கின்ற இடமோ குளிர்ந்ததும் பனிக்கட்டி நிரம்பியதுமான இடம் என்பதையும் நீங்கள் யோசித்தீர்களா?

அவன் ஒரு வேலையில்லாத் தந்தை. அவனை வறுமையென்னும் பேயரசன் முற்றுகையிட்டிருக்கிறான். அவன் உதடுகளிலிருந்து ஈனக் குரலோசை யெழும்புகிறது! ஒருவனுக்கு எவ்வளவு திரவியம்! அவனுடைய பெருவிருந்தில் எத்தனை நண்பர்கள்! இச்செல்வனது மனமும் மகிழ்ச்சிக் கடலில் திளைத்திருக்கிறது. இவன் குழந்தைகளும் இவனோடு களிப்புடன் வாழ்கின்றனர்; இவர்களது விளையாட்டிற்குப் பல ரொட்டித் துண்டுகள்!

ஏ செல்வனே! இவ் வேழை, தன் மனதிலே உங்கள் விழாவினை எதோடு ஒப்பிடுகின்றான்! என்றும் ஒரு சிறு பிரகாசமுமில்லாத தனது வீட்டை ஒப்பிட்டுப் பார்க்கின்றான். பசியினால் வாடும் தன் மக்களை ஒப்பிட்டுப் பார்க்கின்றான். கிழிந்த உடையுடுத்தியிருக்கும் தனது மனைவியை ஒப்பிட்டுப் பார்க்கின்றான். பரப்பப்பட்டிருக்கும் சிறிது வைக்கோலில் படுத்து, மாரிக்காலத்துக் குளிரினால் இறக்குந் தருவாயிலிருக்கும் தனது கிழத் தந்தையை ஒப்பிட்டுப் பார்க்கின்றான்.

இறைவன் இவ்வுயர்வுகளை மக்களின் செல்வத்தில் வைத்திருக்கின்றானாதலால், கஷ்டம் என்னும் மூட்டையைத் தூக்கிக் கொண்டு ஒரு சாரார் குனிந்து செல்கின்றனர். உயரிய சாப்பாட்டிற்கு ஒரு சிலரே விருந்தினர். உலகில் எல்லோரும் ஒரே நிலையில் அமர்ந்திருக்கவில்லை. இந்நிலை உலகத்தே நமக்குக் கெட்டதாகவும் அநியாயமானதாகவும் தோன்றுகின்ற ஓர் சட்டம், சிலருக்கு "அனுபவியுங்கள்" என்றும் உரைக்கின்றது.

இக்கருத்து ஒளியற்றது வெறுப்பைத் தரக்கூடியது. கொடுமையானது. நிர்ப்பாக்கியர்களின் இருதயத்தில் மெல்ல மாறுபடக் கூடியது. சந்தோஷ சாகரத்தில் உழல்கின்ற செல்வச் சிலர்களே! பணக்காரர்களே! நிறைந்த உங்கள் செல்வத்தை அவன் பார்க்கிறான். ஆனால் தனது கரங்களால் உங்கள் பொக்கிஷத்தை அபகரிப்பவன் அவனல்ல. பின் எது? அதுவே தருமம்.

பணக்காரர்களே! ஏழைகளுக்குக் கொடுங்கள்! தருமம் இறைவழிபாட்டின் உடன் பிறந்த சகோதரி. அந்தோ! உங்கள் வாயிற்படியருகே குளிரினால் வாடிய ஒரு கிழவன் முழுந்தாளிட்டு விழும் நிலைமை வருமேயானால், இளஞ்சிறுவர்கள் குளிரினால் சிவந்த கரங்களால், உங்கள் பாதங்களருகே சிந்திக் கிடக்கும் மிச்சம் மீதிகளைப்பொறுக்கும் நிலைமை வருமேயானால், இறைவன் உங்கள்மேல் தன் அருட்பார்வையைச் செலுத்தமாட்டான்.

குடும்பங்களைச் செல்வ நிலையில் வைத்துக் காப்பாற்றும் இறைவன், உங்கள் பிள்ளைகட்குப் பலத்தையும், உங்கள் பெண்கட்குத் தனதருளையும் அளிப்பதற்காகவாவது தருமம் செய்யுங்கள்! உங்கள் கொடி முந்திரிச்செடி நன்றாய்ச் செழித்து வளர்ந்து பழம் கொடுப்பதற்காகவும், உங்கள் களஞ்சியம் தானியங்களால் நிரப்பப் படுவதற்காகவும், நீங்கள் சௌக்கியமாக வாழ்வதற்காகவும், இரவில் இறைவன் நும் கனவில் காட்சி யளிப்பதற்காகவு மாவது தருமம் செய்யுங்கள்!

தருமம் செய்யுங்கள்! உலகம் நம்மை அநாதையாகக் கைவிடும் நாளும் வரும். "அன்றறிவாம் என்னாது அறஞ் செய்க; மற்றது பொன்றுங்கால் பொன்றாத்துணை" யாகும். "நம்மிடத்தில் இரக்கம் கொண்டுளான்" என்று உலகோர் பேசவாவது தருமம் செய்யுங்கள்! சுழல் காற்றினால் வருந்துகின்ற பரம ஏழை, உங்கள் விழாவின்போது துயருறுகின்ற ஏழை, உங்கள் மாளிகை வாயிற்படியில் நின்றுகொண்டு பொறாமைக் கண்ணால் நோக்காமலிருப்பதற்காகவாவது தருமம் செய்யுங்கள்!

தருமம் செய்யுங்கள்! உங்களை மனிதனுக்கிய இறைவனால் நேசிக்கப் படுவதற்கும், ஒரு கொடியவனும் பயந்து வணங்கி உங்கள் நாமத்தைச் சொல்லுவதற்கும், உங்கள் வீட்டில் அமைதி நிலவுவதற்கும், சகோதரத்வம் தாண்டவமாடுவதற்கும் தருமம் செய்யுங்கள்; உங்கள் வாழ்நாளின் இறுதிச்சமயத்தில் உங்கள் பாபங்களை நீக்க விண்ணிலே ஒரு வலிமையான ஏழையின் வணக்கம் நிலைத்திருப்பதற்காகவாவது தருமம் செய்யுங்கள்!

# விஞ்ஞானமும் மருத்துவமும்

டி. பி. நவநீதகிருஷ்ணன் எம். ஏ.



கிரேக்கர் பரிணமக் கொள்கையைப் பற்றியும் அணுக் கொள்கையைப்பற்றியும் செம்மையான கருத்துகளைக் கொண்டிருந்தனர். ஆயினும், அக்கருத்துகளை நிலை நாட்டுதற்கென்று நிதர்சமான சோதனைகள் எவற்றையும் அவர்கள் செய்யவில்லை. சோதனைகளைச் செய்து உண்மையறிதல் என்ற எண்ணமே அவர்களுக்கில்லை. எனவே, இக்காலத்து விஞ்ஞானத்தின் முக்கிய முறைகளான ஊன்றிக் கவனித்தல், 'பரிசோதனை செய்தல்' என்ற செய்வகைகள் அவர்களுக்குத் தெரியாது. செய்முறைகளில்லா திருந்தமையின், அவரது கொள்கைகள் மேலும் மேலும் ஆராயாது விடப்பட்டன. விஞ்ஞான முன்னேற்றம் தடைப்பட்டது. செயலாற்றும் தொழிலாளிகளும், சிந்தனையிற் சிறந்த அறிஞரும் எவ்வகைத் தொடர்புமின்றிப் பிரிந்ததினாலேயே விஞ்ஞானம் முன்னேறாது இருந்தது எனலாம்.

செயலும் சிந்தனையும் பல துறைகளில் தொடர்பற்றிருந்தனவாயினும், ஒரு துறையில் மட்டும் அவை ஒன்றுகூடிவரப் பிரமேயம் ஏற்பட்டது. கிரேக்க நாட்டிலும், எகிப்திலும், மருத்துவம் செய்யும் முகத்தான், கைத்தேர்ச்சியும் அறிவுத் தேர்ச்சியும் ஒருங்கே கூடின. முக்கியமாக இரணவைத்தியத்தில் திறமையெய்துவற்கு அவ்விரு தேர்ச்சிகளும் இன்றியமையாதவை. கிரேக்க மருத்துவமும், இரண வைத்தியமும் முதலில் குருக்களின் மந்திரத்துடன் கலந்தவாறே இருந்தன. ஆயினும் அதன் பிறகு அப்பிரமை, இருகாரணங்களை முன்னிட்டு, அதைவிட்டு நீங்கியது. மந்திரங்கலவாத சிந்தனையின் பாற்பட்ட தத்துவரீதியான கொள்கைகளும், உடற்பயிற்சி மன்றங்களில் அறியப்பட்ட அனுபவ உண்மைகளும், மந்திரத்தை விரட்டி விட்டன. தத்துவத்துக் குட்பட்ட மருத்துவம் இயற்கைக்கு இயைந்தவாறு சீராயிற்று. உடற் பயிற்சிமன்ற அனுபவங்களுடன் தொடர்பு கொண்டதால் மருத்துவமுறை யறிவு வளர்ச்சியுற்றது. உடற பயிற்சி மன்றங்களில் பயில்வோர்களுக்குச் சுளுக்குகளும் காயங்களும் நேர்தல் சகஜம். அவற்றின் இயல்களையும், அவற்றைக் குணப்படுத்தும் வழிகளையும், மன்றத் தலைவர்கள் குறித்துவைத்தனர். அக் குறிப்புகளை ஆதாரமாய்க்கொண்ட சிகிச்சை மரபுகள் நிலைப்படலாயின. நெடுங்காலத்து அனுபவத்தினின்று கைகண்ட இரணவைத்தியச் சிகிச்சை முறைகள் ஏற்பட்டன. அனுபவ அறிவை அடிப்படையாய்க் கொண்டு, விஞ்ஞானியமான சோதனைகள் செய்ததினாலேயே, அம்முறைகள் திருத்தமாய் ஆக்கப்பட்டிருக்கவேண்டும். உடற்பயிற்சி மன்றத்துத்தலைவர், உடல் நலத்திற்கான உணவு எவ்வாறிருக்க வேண்டும் எனவும், தக்க

உட்பயிற்சிகள் எவ்வகையினவை எனவும் அறிதல் அவசியம். அவற்றைப்பற்றி அவர்கள் நன்கு ஆராய்ந்ததினாலேயே மருத்துவ விஞ்ஞானம் சிராயிற்று.

மேற் கூறப்பட்ட வழிகளைப் பின்பற்றினமையின், உணவு, உட்பயிற்சி, இன்னோரன்னவற்றை யொட்டிய மருத்துவ நூற் பகுதிகளின் பாற்பட்ட சோதனை வாயிலான விஞ்ஞானம் வளர்ச்சியடைந்து வந்தது. அது, முறையே ஊன்றிப்பார்த்தல், கைசெய் தேர்ச்சி என்றவழியே, மந்திரத்தை யொழித்துச் சிறப்புற்றது. அச் சிறந்த காரியங்கள் நிறைவேற்றப்பட்டன என்பதற்கு, காஸ் நகரத்து ஹிப்பாக்ரிடிஸ் என்றவரால் எழுதப்பட்டவை எனக் கருதப்படும் விஷயங்களே தக்க எடுத்துக் காட்டுகளாம். அவை வைத்தியச் சிகிச்சை முறையைப்பற்றி விரிவாய்க் கூறுகின்றன. நோயின் அறிகுறிகளும், சிகிச்சை முறையை யொட்டி நோயின் தன்மை மாறியவகைகளும் நன்கு எழுதப்பட்டுள்ளன. நோய் முற்றி இறந்தவரின் வரலாறுகளும் தரப்பட்டுள்ளன. அவை ஒளிக்கப்படவில்லை. அச்சிகிச்சைக் குறிப்புகள், உற்றுக்காண்பதில் வல்லுநரால் குறிக்கப்பட்டவை, என விளங்குகின்றன. அக்குறிப்புகளில் மந்திர வியலான விஷயங்கள் எவையும் கலவாதுள்ளன.

சோதனையை மூலமாய்க் கொண்ட விஞ்ஞானம் மிகவும் அபிவிருத்தியடைந்து வந்தமையின், ஹிப்பாக்ரிடிஸும் அவரது முறையைப் பின்பற்றியவரும் சிந்தனையியலான மருத்துவ அறிவை வளர்த்து வந்த தத்துவ அறிஞரைத் தாக்கினர். சோதனையைத் தவிர வேறு ஆதாரமின்றியுள்ள மருத்துவ முறையே உண்மையானது என அவர்கள் கூறினர். வானிலுள்ளவற்றையும் நிலத்தின் கீழுள்ளவற்றையும் பற்றித் தத்துவ அறிஞர் கொள்கைகளை அமைத்தல் ஏற்றதன்று என சோதனைக் கட்சியார் வாதித்தனர். ஏனெனின் வானிலுள்ளவையும், நிலத்தின் கீழுள்ளவையும் நேரே பரிசோதிக்க இயலாதவை யானமையின் அவை தத்துவரீதியாய் ஆராயப்படலாம் எனவும் நேரே பரிசீலனை செய்ய இயன்றவற்றைப்பற்றித் தத்துவ ஆராய்ச்சி செய்தல்தகாது எனவும் அச்சோதனையாளர் கூறினர். மருத்துவ விஷயங்கள் பல அனுபவத்தால் நேரே அறியப்பட்டவை யெனவும், அவ்வனுபவ அறிவை அடிப்படையாய்க் கொண்ட முறை நீண்டகாலமாய்க் கையாளப்பட்டு வந்திருந்தமையின், அவ்வழியே கண்டு பிடிக்கப்பட்டவிஷயங்களைச் சோதனைமுறையையொட்டி ஆராய்ச்சி செய்து புது விஷயங்கள் கண்டு பிடிக்கப்படலாமேயன்றி, அவ்வழிக்கு மாறான தத்துவரீதியாய் ஆராயப்படல் முறையாகாதெனவும், அவ்வாறு ஆராய்ப்பட்டறியப் பட்டவை உண்மையினின்று பிறழ்ந்தவையாமெனவும், ஹிப்பாக்ரிடிஸியர்கள் வாதம் செய்தனர்.

ஹிப்பாக்ரிடிஸியர்கள் எழுதிய நூல்களில், நாம், தற்காலத்தில் 'விஞ்ஞானவழி' எனக்கூறும் முறைமையின் இலக்ஷணங்கள்

எல்லாம் பொருந்தியுள்ளன. அந்நூலாசிரியர்கள், 'ஊன்றிக் கவனித்தல்'—'கவனித்த விஷயங்களை வகையீடுசெய்தல்'—'அவற்றிற்குப் பொதுவான பான்மைகளைக்காணல்'—'பொதுப்பான்மைகளை யொட்டியவிதிகளை அறிதல்'—'அவ்விதிகள் மற்றும் பலவற்றிற்கும் பொருத்தமானவையா எனச்சோதனைகள் செய்தல்'—என்ற படிப்படியான ஒழுங்கைப்பற்றித் தெளிவாயும் திட்டமாயும் அறிந்திருந்தனர். அவ்வொழுங்கான விஞ்ஞான வழியைத் தெளிவுறுத்தும் நூல்களில் அவர்கள் எழுதியவையே, காலத்தில் முதலானவை. அக்காலத்தில் அவர்கள் நிறுவிய முறை, சிறிது காலத்திற்குள்ளேயே மறைந்து விட்டது. பல நூற்றாண்டுகளுக்குப்பின் இக்காலத்தே அவ்வழி மீண்டும் நிறுவப்பட்டுள்ளது.

ஹிப்பாக்கிரிடிஸியர்களால் துலக்கப்பட்ட விஞ்ஞான வழி சிறிது காலத்திற்குள்ளாகவே ஏன் மறைந்து விட்டது என்பதற்குக்காரணம் கூறலாம். அவர்கள் சரியானவழியைக் கண்டுபிடித்தார்களாயினும், சோதனையால் கண்டுபிடிக்கப் பட்ட திட்டமான விஷயங்களை ஆதாரமாய்க் கொண்ட விதிகளைக்காணல் அரிதாயிருந்தது. மனிதவுடலின் பாற்பட்ட விஷயங்கள் சிக்கலானவை. அவற்றைப்பற்றிச் சோதனை செய்தல் கடினம். எனவே விஷயங்கள் திட்டமாய் அறியப்படாதுபோயின; விதிகளும் காண இயலவில்லை. அவ்வழியே விரைவாய் முன்னேற்றம் ஏற்படவில்லை. அவ்வழி மறைந்துவிட்டது.

மருத்துவ யியலான விஷயங்கள் எளிதானவையன்று. மருத்துவர் வைத்தியம் செய்தபோது காணும் சின்னங்களைப்பற்றி ஆராய்வதினாலேயே விஞ்ஞான முன்னேற்றம் ஏற்படலாம். ஆனால் பொதுவாக, மருத்துவர் பிணியைப் போக்குவதில் மட்டுமே கவனஞ் செலுத்தினர்; நோய்களைப்பற்றியும் அவற்றை யொட்டிய உடற்பகுதிகளைப் பற்றியும் விஞ்ஞானீயமாய் ஆராயும் ஆவல் இல்லாதவர். ஆகவே மருத்துவத்தின் பாற்பட்ட விஷயங்களை யொட்டி விஞ்ஞானம் முன்னேற்றமடையவில்லை. பிற்காலத்தில் பௌதிகம், இயக்கவியல் (மெகானிக்ஸ்) இன்னோரன்னவற்றை யொட்டிய எளிய விஷயங்களைப்பற்றி ஆராய நேர்ந்த போதே விஞ்ஞானம் வளர்ச்சியுற்றது. பிற்காலத்தில் அவ்விஷயங்களைப் பற்றி ஆராய்வதினால் இழிவு ஒன்றுமில்லை என சமூகத்தினரால் கருதப்பட்டபோதே, ஆராய்ச்சியாளருக்கு நன் மதிப்பு ஏற்பட்டு அவர்கள் ஆராய்ச்சிகளை ஊக்கத்துடன் செய்யலாயினர். விஞ்ஞான வளர்ச்சிக்கு ஆரம்பத்தில் மருத்துவம் துணை செய்துள்ளதாயினும், மருத்துவமே விஞ்ஞானவழிக்கு மூலமானது என எண்ணலாகாது. மருத்துவத்தின் பகுதிகள் பல இன்றும் விஞ்ஞானீய மெருகின்றி உள்ளன. விஞ்ஞானீயமான மருத்துவப் பகுதிகள், உயிர் நூல்—ரஸாயனம்—பௌதிகம் என்றவற்றுடன் தொடர்பு கொண்டவையே.

இரேக்கர் கண்டுபிடித்த அணுக்கொள்கையும், பரிணமக் கொள்கையும், தக்க சோதனைச் சான்றுகளால் அரண் செய்யப்

பட்டிருந்தமையின், அவை மதிப்பற்றவையாயின. சோதனை வாயிலால் நிரூபிப்பதற்கான செயல்முறை வழிகளில் ஈடுபடல் கண்ணியமன்று என அக்கால சமூகத்தினர் கருதினர். கிரேக்க மருத்துவமுறை, தக்க விஞ்ஞான விதியியல்களால் வகுக்கப்படா திருந்தமையின் அது பயனற்றதாயிற்று. ஆகவே, ஒருபுறம் செயல் முறையின் பாற்படா தவிதியியலும், மற்றொரு புறத்தில் விதி முறையின் பாற்படாத செயல்முறை விஷயங்களும், இருத்தலால் மட்டும் விஞ்ஞானம் முன்னேற்ற மடைந்து விடும் என எண்ண இடமில்லை. அவற்றிடை தொடர்பு இருக்க வேண்டும். ஆராய்ச்சிக்கான விஷயங்களைச் சோதனை செய்பவரின் நிலைமை சமூகத்தில் கண்ணியமானதாய் இருத்தல் வேண்டும்; அவர்கள் விதியியல் முறையை வெறுக்கக்கூடாது; சமூகத்தினரின் ஆதரவு இருசாராருக்கும் இருக்கவேண்டும். அந்நிலைமையிலேயே விஞ்ஞானம் முன்னேற்ற மடையும்.

---

# சிலப்பதிகாரம் பெருங்காவியமா?

வித்துவான்-வெ. சு. சுப்பிரமணியாச்சாரியார் **P. O. L.**



*(சென்ற இதழின் தொடர்ச்சி)*

விண்பொரு பெரும்புகழ்க் கரிகால்வளவன்
தண்பதம் கொள்ளும் தலை நாள்போல (கடலாடு-159.160)

என்ற தொடருக்கு, 'இக்கரிகால்வளவன் புதுப்புனலில் விழவு கொண்டாடும் தலைநாட்போல' என்று எழுதியுள்ள உரையாலும் "கொள்ளும்" என்ற நிகழ்காலப் பெயரெச்சத்தாலும் கோவலன் மாதவியோடு கடலாடிய காலத்துக் கரிகாலன் இருந்தான் என்றும் புலனாகின்றது.

"உழைப்புலிக் கொடித்தேருரவோன் கொற்றமொடு
மழைக் கருவுயிர்க்கும்" (காடுகாண் காதை; வரி 142)

என்ற தொடரிலுள்ள "உரவோன்" என்ற சொல்லுக்குக் 'கரிகாலன்' என்று பொருள் எழுதுவதனாலும்,

"சூழ்கழல் மன்னற்குக் காட்டல் வேண்டி" (அரங்கேற்று. 11)

என்ற தொடருக்குச் 'சோழன் கரிகாலனுக்குக் காட்டவேண்டி' என்ற உரையிலும்,

"வேந்துறு சிறப்பின் விழுச்சீ ரெய்திய
மாந்தளிர் மேனி மாதவி" (அடைக்கலம். வரி 21)

இதிலுள்ள 'வேந்து' என்ற சொல்லுக்குக் கரிகாலன் என்று பொருளெழுதியமையாலும்,

"மன்னன் கரிகால் வளவன்" (வஞ்சினம்-வரி 11)

என்று கரிகாலனுடைய பெயரை வெளிப்படையாகக் கூறுகின்றமையாலும் மேற்கண்ட எட்டு இடங்களில் சினவேற் செம்பியன், இருநிலமன்னன், திருமாவளவன், கரிகால்வளவன், புலிக் கொடித் தேருரவோன், சூழ்கழல் மன்னன், மன்னன் கரிகாலன்- என்று சோழனுடைய பெயர் வெளிப்படையாகவும் குறிப்பாகவும் வந்துள்ளன.

மேலே காட்டியவாறு கோவலன் கண்ணகியை மணந்து இல்லறம் நடத்திய காலத்தும் மாதவியோடு கடலாடு காலத்தும் கரிகாலனுடைய செய்தியே கூறப்பெற் றிருக்கிறது.

மதுரைக் காண்டத்தேயுள்ள இறுதிக் கட்டுரையில் மட்டும் "அரசு கட்டிலிற்றுஞ்சிய பாண்டியன் நெடுஞ்செழியன்" என்ற பாண்டியனுடைய பெயர் குறிக்கப் பெற்றிருக்கிறது. மற்றைய இடங்களில் பாண்டியன் என்றும் தென்னவன் என்றுமே நூலகத்தே கூறியுள்ளது.

இக்காவியத்தின் மதுரைக்காண்டத்தின் இறுதியிலேயுள்ள, துன்பமாலை, ஊர்சூழ்வரி, வழக்குரைகாதை, வஞ்சினமாலை, அழற்படுகாதை. கட்டுரைக் காதை ஆகிய ஆறு காதைகள் கண்ணகியின் செய்தியையும், புகார்காண்டத்து உள்ள (1) மங்கல வாழ்த்துக் காதை, (2) மனையறம் படுத்த காதை (3) அடைக்கலக் காதை ஆகிய மூன்று காதைகள் கண்ணகி கோவலனை யணந்து இல்லறம் நடாத்திப் பிரிந்து மீண்டும் கூடி

மதுரைக்குக் கணவனுடன் போந்து மாதரியிடம் அடைக்கலம் புகுந்த செய்தியையும், (3) அரங்கேற்றுகாதை (4) அந்திமாலைச் சிறப்புச் செய்த காதை (6) கடலாடு காதை (7) கானல்வரி (8) வேனிற்காதை ஆகிய ஐந்து காதைகள் மாதவி அரங்கேறி நடித்து அரசனால் பரிசிலாக அளிக்கப்பட்ட பச்சைமாலையால் கோவலனைப் பிணித்துக், கூடியிருந்து இந்திரவிழாவிற்குச் சென்று நடித்ததும் பின்னால் கடலாட்டு விழாவின் இறுதியில் கானல் வரி பாட்டால் கோவலனைப் பிரிந்து வீடு போந்து, பிரிவாற்றாது கோவலனுக்கு திருமம் விடுத்து அழைத்தும் வாராமை கண்டு வருந்தி இருந்த செய்தியையும் கூறுகின்றார். (9) கனாத்திறம் உரைத்த காதையில் தேவந்தி என்ற பார்ப்பனப் பெண்ணைக் கண்ணகியின் தோழியாகத் தோற்றுவித்து வரந்தருகாதையால் அவளைக் கண்ணகியின் கோயிலுக்குப் பூசை செய்து வருமாறு பணிக்கின்றார். (13) புறஞ்சேரி இறுத்த காதையால் கோசிகன் கோவலனை மதுரைக்குச் சமீபத்தில் கண்டு மாதவியின் திருடம் காட்டிச் சென்றமை முதலிய செய்தியையும் (15) அடைக்கலக் காதையில் மாடலன் என்னும் பார்ப்பனன் ஒருவன் கோவலனைக் கண்டு அவனுடைய பெருமையைக் கூறின செய்தியையும் கூறுகின்றார். இறுதியிலுள்ள ஏழு காதைகளால் 25 முதல் 30) கண்ணகியின் செய்தி கேட்டுக் குட்டுவன், கிரபராதிகளான மதுரையைக் குடிகளோடு எரித்ததாகிய வீரச்செயலில் ஈடுபட்டு அவளுக்கு ஒரு கற்றளி (கோயில்) சமைத்து அவளுடைய படிவத்தை நாட்டி வணங்கி வரம் பெற்ற செய்தியையும் கூறுகின்றார்.

## முக்கிய உறுப்பினர்கள்

இக்கதைகளுள் ஆறு கண்ணகியின் தனிச் செயலைப் பற்றியும், ஆறு செங்குட்டுவனுடைய தனிச்செயலைப் பற்றியும் கூறுகின்றமையாலும், இக்கதைக்கு முக்கிய உறுப்பினர்கள் இவர்கள் இருவருமேயாகும். மாடலன் என்பான் மதுரைக் காண்டத்தின் இறுதியிலே அதாவது 15வது அடைக்கலக் காதையில் தோன்றி, வஞ்சிக்காண்டத்தின் இறுதி 30 வது வரந்தருகாதையில் மறைகின்றான். கவுந்தி அடிகளும் அங்ஙனமே புகார் காண்டத்து இறுதியிலுள்ள 10வது நாடுகாண் காதையிலே தோன்றி மதுரைக் காண்டத்தின் 15வது அடைக்கலக் காதையில் மறைகின்றார். கோவலனைப் புகார் காண்டத்தில் முதலிலே மங்கல வாழ்த்துக் காதையில் மணப்பந்தலில் தோற்றுவித்து மதுரைக் காண்டத்தின் இடையிலே 16வது கொலைக்களக்காதையில் முடிக்கின்றார். மீண்டும் 23 வது கட்டுரைக் காதையில் அவனை விமானத்தில் தோற்றுவிக்கின்றார்.

செங்குட்டுவனையும் வஞ்சிக் காண்டத்தின் முடிவில் 25 வது காட்சிக் காதையில் தோற்றுவித்து இறுதியிலே மறைக்கின்றார். எனவே இவ்வுறுப்பினர்களை எல்லாம் இங்ஙனம் தோற்றி மறைத்துப் பின்னர் கண்ணகியை மட்டும் புகார் காண்டத்தின் முதற் காதையாகிய மங்கல வாழ்த்துக் காதையில் மணப்பந்தலில் கோவலனோடு தோற்றுவித்து, மதுரைக் காண்டத்தின் இடையேயுள்ள 16வது கொலைக்களக் காதையில் கோவலனிடமிருந்து பிரித்து மதுரைக் காண்டம் 23 வது கட்டுரை காதையில் அவளுடைய உடலை முடித்துக் கணவனோடு வானவூர்தி ஏறிச்செல்லும் காட்சியைக் காட்டி மீண்டும் வஞ்சிக் காண்டத்தின் இறுதியிலே 28வது நடுகற் காதையில் அவளுடைய ஆவியைக் கல்லில் அறைகின்றார். எனவே இந்நூலில் தோன்றும் பலருள்ளும் கண்ணகியே தலையாய உறுப்பினள் ஆவாள். இது பற்றியே மங்கலவாழ்த்துப் பாடலில் கண்ணகியையே முற்கூறினர் போலும். மாடல மறையோன் ஏறக்குறைய நான்கு காதைகளில் வந்தாலும் அவனை ஒரு உறுப்பாகக் கொண்டிலர் போலும்.

தொடர் கதை.

# தேவ தேவி

சு. மீ. கணபதி



“நீங்கள் சொல்லியபடி நான் நடந்து கொள்கிறேன். எனது பயம் தெளிவடைந்தது. நீங்கள் வந்த மறு நாளே நான் கமலா இருப்பிடம் சென்றேன். அங்கே இன்று மாலை மூன்றரை மணிக்குத்தான் தந்தி கிடைத்தது. மாப்பிள்ளையின் காரில் வந்தேன். உங்களைக் காண முடியுமா என்ற ஏக்கமிருந்தது. எனக்கு இப்பொழுது சிறிது தைரியமும் வந்தது. டிரைவரைத் திரும்பப் போகும்படி சொல்லி வந்து விடுகிறேன்” எனக்கூறி வெளியில் வந்தான்.

“பத்மாசனி அம்மாள் நினைவுடன் என்னிடம் பேசினார்களென்றும் காரை அநாவசியமாக நிறுத்தி வைக்க வேண்டாமென்ற கருத்துடன் உன்னை இங்கிருந்து அனுப்பி வைப்பதாகவும் எல்லோரிடமும் சொல். நான் வருமுன்பு கடிதம் எழுதுகிறேன் என்றும் சொல்” என்று கூறி அவனை அனுப்பி வைத்தான். அதன் பின்பு பத்மாசனியின் பக்கம் வந்து உட்கார்ந்து கொண்டான்.

“சுவர்ணு! நீ சிறிதும் கவலை கொள்ளாதே. உன் சொந்தச் சகோதரனைக என்னைப் பாவித்துவா...உனக்கு ஒரு குறைவும் உண்டாகாதபடி கவனித்துக் கொள்வது என் கடமை” என்றான் வாசு.

“வாசு! நான் உங்களை மனப்பூர்வமாக ஆசீர்வதிக்கிறேன். இன்று காலை வரையில் நீ வராதபடியால் சந்தேகம் கொண்டு நான் ஆத்திரத்தில் ஒரு காரியம் செய்து விட்டேன். சோமுவுக்கு—அவன்தான் உன் சிநேகிதன்—தந்தி கொடுக்கச் சொன்னேன். சுந்திரா சுவர்ணத்தைச் சகோதரிபோல நினைத்து ஆதரிக்க வேண்டுமென்றும், நீ சுவர்ணுவைக் காப்பாற்றுவாய் என நம்பிக்கை யில்லையென்றும், உடனே வரும்படியாகவும் தந்தி அனுப்பி விட்டேன். இப்பொழுது அந்த முட்டாள் தனத்தை அறிகிறேன். இதற்காக என்மீது கோபப் படாதே. சுவர்ணுவைக் காப்பாற்றி, அவள் கண் கலங்காமல் பார்த்துக் கொள். இதைத்தான் நான் உன்னிடம் கேட்டுக் கொள்கிறேன்” என்றாள் பத்மாசனி.

“ஒரு குறைவுமின்றிப் பார்த்துக் கொள்கிறேன். அநாவசியமாகச் சோமுவுக்குத் தந்தி கொடுத்திருக்கிறீர்கள். அவன் எப்படி என்னிடம் நடந்து கொள்வானோ? சுந்திரா என்ன நினைப்பாளோ என்று கவலைப் படுகிறேன். இரண்டு நாட்கள் முன்னம் இந்தச் சந்தேகங்களே கிடையாது. சுந்திரா என்னை வெறுக்கிறாள். சோதரியாகக் கருதிவிட்ட அவளை மணக்க மறுத்ததற்காக என்னுடன் பேசுவதையும் நேற்று முன் தினத்திலிருந்து விட்டு விட்டாள். இந்த முப்பது ரூபாய்களை அவர்கள் வந்தால் செலவானதற்கு வைத்துக் கொள்ளும்படி கூறுங்கள். நான் கொடுத்தால் மறுப்பார்கள்” என்று கூறி சுவர்ணுவிடம் பணம் கொடுத்தான். அவளும் தாயின் சொற்படி வாங்கி வைத்துக் கொண்டாள்.

“ஆனால் சுந்திராவையும் நீ மணந்து கொள்ளப் போவதில்லை. சுந்திராவும், சுவர்ணமும் நற்குணமுடையவர்கள். அவர்களுக்குக் கொடுத்து

வைக்கவில்லை. வாசு! இந்தா, இந்தப் பெட்டியில் செக் புஸ்தகம் இருக்கிறது. எடுத்துக் கணக்கு எவ்வளவு இருக்கிறதோ அதற்குச் செக் உன்பேரில் எழுதிக்கொள். வித்யாசமாக என் கடைசி நாளில் ஒன்றும் நினைக்காதே. சுவர்ணவை ஒப்புவித்ததுபோல் பணத்தையும் உன் பெயருக்கு எழுத வேண்டியதுதான். என்ன யோசிக்கிறாய்? சீக்கிரம் எழுதிவிடு'' என்றாள் பத்மாசனி.

எழுநூற்று எண்பது ரூபாய்கள் கணக்கில் இருந்தது. அப்படியே எழுதினான். ''சுவர்ணவின் கல்யாணத்திற்காக ஐந்நூறு ரூபாய் பாலிசி இருக்கிறது. ரொக்கமாக எழுபத்தைந்து இருக்கிறது. நான் யாருக்கும் கடன் கொடுக்க வேண்டியதில்லை. எனக்கு யாரும் கொடுக்க வேண்டிய பாக்கியில்லை. இவ்வளவையும் வைத்துக் கொண்டு என் சுவர்ணவின் மணத்தை நிறைவேற்று. எனக்குக் களைப்பு மேலிடுகிறது. குழந்தாய் சுவர்ண! என் செல்வமே! இதுவே நான் கடைசியாக உன்னைக் கூப்பிடுவது என நினைக்கிறேன். வாசு, வாக்குத் தவறமாட்டான். புத்திசாலி என்ற பெயர் எடு. நம் குடும்பப் பெயர் என்றும் புனிதமாயிருக்கப் பாடு பாடுவது உன் கடமை. என் செல்வமே! உன்னைப் பிரிய நேரிட்டு விட்டது. பிறந்த பின்பு இறப்பது நிச்சயம். அழுதால் நான் திரும்பி வரப்போவதில்லை. உனக்குக் கணவனாக வருபவனைச் சந்தோஷப் படுத்து. துன்பம் வந்தால் சகித்துக்கொள். உலகில் இன்பமும், துன்பமும் மாறி மாறி வரும். எதைக் கண்டும் மனம் தளராதே. நான் உனக்குச் சொல்லக் கூடியவைகள் இவைகள்தான். வாசுவின் மனம் கோணாமல் நடந்து கொள்வது உன் பொறுப்பு. பேறு பதினாறும் பெற்று பெருவாழ்வு நீ வாழ்வாய்'' என்று தன் பெண்ணை ஆசீர்வதித்தாள்.

அச்சமயம் 'அவசரத் தந்தி' என்ற சப்தம் கேட்டு வாசுவும், சுவர்ணவும் வெளியில் ஓடினார்கள். சுவர்ணவுக்குத் தந்தி வந்திருந்தது. பிரித்துப் பார்த்தாள். சுந்திரா தந்தி அடித்திருந்தாள். ''நீ என் சகோதரி; புறப்பட்டு வா, என்னுடன் இருக்கலாம். நான் வரச் சந்தர்ப்பமில்லை'' என்று எழுதியிருந்தது. அதைத் தன் தாயாரிடம் சொன்னாள். இது எல்லோருக்கும் ஆறுதல் ஆயிற்று.

''அம்மா! நீ கூறிய புத்திமதிப் படியே நடந்து கொள்கிறேன். நீயிருந்து என் வாழ்வைப் பார்க்காமல் போவது என்பதை என்னால் நினைக்கவும் முடியவில்லை. பிறந்த பின்பு எது வரினும் அனுபவித்துத் தானே ஆகவேண்டும்? கஷ்டத்தைச் சகித்துக் கொள்ள நீ கையாண்டு வந்த வழிகளை எல்லாம் பின்பற்றுகிறேன். ஆனால் என்னை இனி யார் சுவர்ண என்று அன்புடன் அழைக்கப் போகிறார்கள். அப்படியே அழைத்தாலும் அது பெற்ற தாயின் அன்பு போலாகப் போவதில்லை. நீ பிழைத்து எழ வேண்டும். மறுபடியும் சுவர்ண என்று அன்புடன் அழைக்க வேண்டும். ஆண்டவன் இதற்குத் துணை புரியப் பிரார்த்திக்கிறேன். பெற்ற தாயையும் விடப் பன் மடங்கு பிறர் அன்பு செலுத்தினாலும் உன்னுடைய அன்பு மொழிகள் போல் ஆகாது. உன் ஆசீர்வாதத்தின் துணையால் நீ கூறியபடி நடந்து கொள்கிறேன். இவரிடமே என் மணம் முடியும் வரையிலும் நீ விரும்பிய படியே தங்கி யிருக்கிறேன். என்னைப் பற்றிய கவலைகளை மறந்து சந்தோஷமாயிருக்க முயற்சி செய் அம்மா. இரண்டு நாட்களாக ஒரே துன்பப் பட்டாய். உனக்குத் தேறுதல் கூறவும் முடியாமல் அவதி அடைந்தேன். நான் கவலையின்றிக் காலங் கடத்துவேன் என்ற நம்பிக்கையும் எனக்கு உண்டாயிற்று'' என்றாள் சுவர்ண. வெளிப்பட இவ்வளவு பேசினாளே தவிர அவள் கண்களில் நீர் சொரிந்து கொண்டு தானிருந்தது.

"குழந்தாய் சுவர்ணு! என்மனம் ஆறுதல் அடைந்தது. நீ சுகமே வாழ் வாய். வாசு உன் கையைக் கொடு. சுவர்ணு உன் அடைக்கலம்; அவளை நீ எப்படி வேண்டுமாகிலும் நடத்து. இனி என் பொறுப்பு விட்டது. மனைவி யாக அவளை ஏற்க முயற்சி செய். இல்லை முடியாது என்றால், உன் கமலா வைப்போல் அவளையும் நினை. இருவரும் என் சமீபம் வாருங்கள். கடைசி முறையாக உங்களைப் பார்க்கிறேன்" என்றாள் பத்மாசனி. இவர்களைப் பார்த்தபடியே சில நிமிஷங்களிருந்தாள். அவள் கண்களில் ஜலம் ஓடிற்று. அப்படியே வேறு உலகம் அடைந்து விட்டாள். வாசுவும், சுவர்ணுவும் அழு தனர். தேற்றுவாரில்லை. இப்படியே இரவு முற்றும் கழிந்தது. மறுநாள் கிரியைகளும் நடந்த பின்பு இருந்த சாமான்களை மூட்டை கட்டினான்.

"சுவர்ணு! இன்னும் அழுதுகொண்டிருப்பது புத்திசாலித் தனமாகாது. நடக்க வேண்டியவைகளைக் கவனிக்க வேண்டும். உனக்கு என் சோதரி கமலாவுடன் இருப்பதற்கு ஆட்சேபணை ஒன்றும் இருக்காது என நினைக்கி றேன். கமலா நல்ல குணமுடையவள். உன்னைப் பிரியத்துடன் பார்த்துக் கொள்வாள். நானும் அடிக்கடி உன்னை வந்து பார்த்துப் போகிறேன். எவ்வளவு சீக்கிரத்தில் முடியுமோ உன் விவாகம், அதற்கு வேண்டிய வற்றை நான் செய்கிறேன். இருந்தாலும் உன் அபிப்பிராயம் தெரிந்துதான் ஆக வேண்டும். உன் பேச்சுக்கு மறுத்து நான் ஒன்றும் செய்யப் போவ தில்லை. நன்றாக ஆலோசனை செய்து சொல். தவிர, நீ யாரையாவது கண வனாக வரித்திருந்தால் உன் தாய்போல் நினைத்து என்னிடம் கூறு. வெட் கப்பட்டுப் பிரயோசனமில்லை. எது உசிதம் என உனக்குத் தோன்றினாலும் சொல்" என்றான் வாசு.

"உங்கள் சகோதரியைப் பார்க்க எனக்கு ஆவலிருக்கிறது. உங்க ளுக்கு ஆட்சேபமில்லையென்றால் நீங்களிருக்கும் இடத்திலேயே இருப்பது தான் எனக்குத் திருப்தி. என் மண விஷயமாக முயற்சிக்கவும் உங்களுக்கு சௌகரியம். நான் நீங்களிருக்கும் இடத்தில்தா விருப்பேன்."

"உன் இஷ்டத்திற்கு மாறாக நடக்க நான் விரும்பவில்லை. ஆனால் முன் போயிருந்தால் சுந்திரா அடிக்கடி கவனித்துக் கொள்வாள். இப்பொழுது அவளும் வரமாட்டாள். தனிமையிலிருக்கும் தைரியம் உனக்கு இருக்குமா எனவே சந்தேகம். கமலா முதலியவர்கள் உன்னை அவர்களிடமே அழைத்து வரச் சொன்னார்கள். முதலில் அங்கு சென்ற பின்பு போகலாம். ரயிலுக்குச் நேரமாகி விட்டது. போய் வண்டி கொண்டு வருகிறேன்."

வண்டி வந்ததும் அதில் ஏறிக்கொண்டு தன் தாயுடன் பல வருஷங்கள் இருந்த ஊரைவிட்டுத் தாயைப் பிரிந்து செல்வதால் அழுது கொண்டே சென் றாள். அழுகையால் முகம் வீங்கி விட்டது. கண்கள் சிவப்பாயிற்று. எவ் வளவு தேற்றியும் பிரயோசன மேற்படவில்லை. ரயில் புறப்பட்ட சிறிது நேரத்திற்கெல்லாம் தன் மனதைத் தேற்றிக் கொண்டாள்.

"எனக்கு, மூன்று வருஷங்களுக்கு முன்பு என் தாயார் உங்களைப் பற் றிச் சொல்லியிருக்கிறார்கள். இன்றே கூறுவது போலவும், கேட்பதுபோல வும் இருக்கிறது. உங்களுக்கே என்னை மணம் செய்து வைக்கப் போவதா கவும், உங்கள் நற்குணங்களைப் பற்றியும் சொல்லி யிருக்கிறார்கள். நேரில் தங்களைப் பார்க்கும் வரை என் மனதில் நீங்கள் எவ்விதமிருப்பீர்களோ என எண்ணியிருந்தேன். பார்த்த பின்பு உங்களை மணந்து கொள்வது என்று தீர்மானித்தேன். ஆனால் என் துரதிருஷ்டம் பிடிவாதமாக மறுத்து விட்டீர்கள். நான் இதற்காகப் பெரிதும் வருந்தினேன். இப்பொழுது உங்க ளையே அடைக்கலமெனக் கொண்டு விட்டேன். எப்படி நீங்கள் நடந்து

கொண்டாலும் நான் அதற்குப் பணிந்துதான் ஆகவேண்டும். அம்மா கூறிய படி எனக்காக உங்கள் மணவினையை ஒத்திப்போட வேண்டாம். என்னை மணந்துகொள்ள முடியாதென்றால் உங்கள் மனதிற்குகந்த பெண்ணை அதி சீக்கிரம் மணந்து கொண்டால் எனக்கும் சந்தோஷமாயிருக்கும். இவ்வ ளவு பேச எனக்குப் பாத்யதையில்லை. நான் உங்களிஷ்டத்திற்கு மாறாகப் பேசுவதாகக் கொள்ள வேண்டாம். கூடிய வரையில், உங்களுக்கு என் னால் துன்பமில்லாமல் பார்த்துக் கொள்வேன். நவிர, சுந்திராவுடன் நான் பேசிப் பழகுவதால் தீங்கு ஒன்றுமில்லையே? அவளும் நல்ல குணமுடைய வள்."

"சுவர்ண! வீண் துன்பம் உண்டாக்கிக் கொள்ளாதே. நான் மணம் செய்து கொள்ளும் எண்ணம் அடியுடன் போய்விட்டது. துன்பம் மேலும் மேலும் வந்ததைப் பார்த்து, உலகப் போக்கை அறிந்து விட்டேன். அதனால் என்னை நினைத்து வருந்தாதே. எனது முதல் வேலை உன்னைச் சற்குணனை ஒருவனுக்கு மணம் செய்து கொடுப்பது தான். சுந்திராவுடன் நீ பழகுவதை நான் வெறுக்கமாட்டேன். அவள் மேல் நான் கொண்டிருக்கும் சகோதர வாஞ்சையை ஒருகாலும் நான் விலக்க முடியாது. அவள் அடிக்கடி உன் நிமித்தமாகவாவது வந்து போனால், அவளைப் பார்ப்பதிலாவது சிறிது சாந்தி ஏற்படும். பிடிவாத குணம் அவளுக்கு என் மேலிருந்த பாசத்தை நீக்கி விட்டது. என்றாவது அவள் தன் செய்கைக்கு வருந்தி, பழையபடி அன்பு செலுத்துவாள் எனவே நினைக்கிறேன். உன்னைக் கமலாவைப் போல் நேசிக்கிறேன். இது விஷயத்தில் உனக்குக் கவலை வேண்டாம். துன்பத்தின் நிழல் உன் மீது படாதபடி காப்பாற்றுவது என் பொறுப்பு."

"தங்களுடைய அன்பு என்றும் நீடித்திருக்க வேண்டும். என்மீது அன்புடனிருந்த ஒரே ஆத்மாவும் போய் விட்டது. ஒரே வேண்டுகோள். மறுக்க மாட்டீர்களென நினைக்கிறேன். தங்கள் சகோதரி யிடமே என்னை அவர்கள் இருக்க வற்புறுத்தினாலும் என்னை அவ்விடத்தி லின்றும் அழைத் துச் சென்று விட வேண்டும். நான் கேட்பதை எப்படி நினைத்துக் கொண் டாலும் சரிதான். சுந்திரா கூடவே இருக்க நான் விரும்புகிறேன். ஆனால் நீங்கள் வற்புறுத்தினால் நான் பணிந்து தானாகவேண்டும்."

"உன்னை வற்புறுத்த மாட்டேன். உன் இஷ்டத்திற்கு மாறாக நான் நடப்பேன் என நினைக்கவேண்டாம். கமலா உன்னைச் சகோதரி போன்று அன்புடன் நடத்தி வருவாள். ஆனால் நீ விரும்பியபடியே நான் அழைத் துச் சென்று விடுகிறேன். ஊர் சென்றதும் முதல் வேலையாக உனக்குப் பிடித்த வீட்டைப் பார்க்க வேண்டும். சமையல் வீட்டில் வைத்துக்கொள்ள நான் விரும்பவில்லை. ஹோட்டலி லிருந்தே சாப்பாடு தருவித்துக் காலம் தள் ளலாம். உனக்குப் பொழுது போக்குவதற்கு வழி என்ன செய்ய வேண்டு மென்பதையும் யோசித்துச் சொல். அடுத்த இரண்டாவது ஸ்டேஷனில் நாம் இறங்கவேண்டும். கமலாவிடம் நீ சாதாரணமாக நடந்து கொள். அவளும் அப்படியே நடந்து கொள்வாள்" என்றான் வாசு. சுவர்ண பதில் பேசாதபடி வெளியே பார்த்துக் கொண் டிருந்தாள்.

(தொடரும்)

---

## தாரண ஸ்ரீ மார்கழிமீ நவக்கிரக * நிராயன சுத்த ஸ்புடம

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடிகாரமணி-சென்னை காலை 5½-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா (வ) | க | பா | க | பா | க | பா (வ) | க | பா | க |
| 1 | 5 | 34 | 12 | 239 | 54 | 232 | 48 | 230 | 59 | 255 | 45 | 153 | 19 | 281 | 34 | 75 | 29 | 86 | 45 |
| 2 | 5 | 38 | 09 | 240 | 55 | 245 | 47 | 231 | 43 | 255 | 29 | 153 | 24 | 282 | 46 | 75 | 24 | 86 | 42 |
| 3 | 5 | 42 | 05 | 241 | 56 | 259 | 14 | 232 | 26 | 254 | 52 | 153 | 29 | 283 | 57 | 75 | 19 | 86 | 39 |
| 4 | 5 | 46 | 02 | 242 | 57 | 272 | 41 | 233 | 10 | 254 | 14 | 153 | 33 | 285 | 08 | 75 | 15 | 86 | 36 |
| 5 | 5 | 49 | 58 | 243 | 58 | 286 | 29 | 233 | 54 | 253 | 15 | 153 | 38 | 286 | 19 | 75 | 10 | 86 | 33 |
| 6 | 5 | 53 | 55 | 244 | 59 | 300 | 18 | 234 | 38 | 252 | 15 | 153 | 42 | 287 | 30 | 75 | 05 | 86 | 30 |
| 7 | 5 | 57 | 51 | 246 | 00 | 314 | 21 | 235 | 22 | 251 | 00 | 153 | 47 | 288 | 41 | 75 | 00 | 86 | 27 |
| 8 | 6 | 01 | 48 | 247 | 02 | 328 | 24 | 236 | 06 | 249 | 44 | 153 | 51 | 289 | 51 | 74 | 55 | 86 | 23 |
| 9 | 6 | 05 | 44 | 248 | 03 | 342 | 35 | 236 | 50 | 248 | 23 | 153 | 55 | 291 | 02 | 74 | 50 | 86 | 20 |
| 10 | 6 | 09 | 41 | 249 | 04 | 356 | 47 | 237 | 31 | 247 | 01 | 153 | 58 | 292 | 12 | 74 | 45 | 86 | 17 |
| 11 | 6 | 13 | 37 | 250 | 05 | 10 | 57 | 238 | 18 | 245 | 43 | 154 | 02 | 293 | 23 | 74 | 40 | 86 | 14 |
| 12 | 6 | 17 | 34 | 251 | 06 | 25 | 08 | 239 | 03 | 244 | 26 | 154 | 05 | 294 | 33 | 74 | 36 | 86 | 11 |
| 13 | 6 | 21 | 30 | 252 | 07 | 39 | 05 | 239 | 47 | 243 | 21 | 154 | 08 | 295 | 43 | 74 | 31 | 86 | 08 |
| 14 | 6 | 25 | 27 | 253 | 09 | 53 | 02 | 240 | 31 | 242 | 16 | 154 | 11 | 296 | 53 | 74 | 26 | 86 | 04 |
| 15 | 6 | 29 | 23 | 254 | 10 | 66 | 32 | 241 | 15 | 241 | 29 | 154 | 14 | 298 | 03 | 74 | 21 | 86 | 01 |
| 16 | 6 | 33 | 20 | 255 | 11 | 80 | 03 | 242 | 00 | 240 | 43 | 154 | 16 | 299 | 12 | 74 | 16 | 85 | 58 |
| 17 | 6 | 37 | 16 | 256 | 12 | 93 | 00 | 242 | 44 | 240 | 18 | 154 | 19 | 300 | 22 | 74 | 11 | 85 | 55 |
| 18 | 6 | 41 | 13 | 257 | 13 | 105 | 57 | 243 | 28 | 239 | 53 | 154 | 21 | 301 | 31 | 74 | 06 | 85 | 52 |
| 19 | 6 | 45 | 09 | 258 | 14 | 118 | 21 | 244 | 12 | 239 | 48 | 154 | 23 | 302 | 41 | 74 | 01 | 85 | 49 |
| 20 | 6 | 49 | 06 | 259 | 15 | 130 | 44 | 244 | 57 | 239 | 43 | 154 | 25 | 303 | 50 | 73 | 56 | 85 | 45 |
| | | | | | | | | | | (வ-நி) | | | | | | | | | |
| 21 | 6 | 53 | 02 | 260 | 16 | 142 | 44 | 245 | 42 | 239 | 55 | 154 | 27 | 304 | 59 | 73 | 51 | 85 | 42 |
| 22 | 6 | 56 | 59 | 261 | 18 | 154 | 44 | 246 | 27 | 240 | 08 | 154 | 28 | 306 | 07 | 73 | 46 | 85 | 39 |
| 23 | 7 | 00 | 55 | 262 | 19 | 166 | 37 | 247 | 12 | 240 | 35 | 154 | 29 | 307 | 16 | 73 | 41 | 85 | 36 |
| 24 | 7 | 04 | 52 | 263 | 20 | 178 | 30 | 247 | 56 | 241 | 03 | 154 | 30 | 308 | 24 | 73 | 37 | 85 | 33 |
| 25 | 7 | 08 | 48 | 264 | 21 | 190 | 34 | 248 | 41 | 241 | 42 | 154 | 31 | 309 | 32 | 73 | 32 | 85 | 30 |
| 26 | 7 | 12 | 45 | 265 | 22 | 202 | 38 | 249 | 26 | 242 | 21 | 154 | 32 | 310 | 40 | 73 | 27 | 85 | 26 |
| 27 | 7 | 16 | 41 | 266 | 23 | 215 | 10 | 250 | 11 | 243 | 10 | 154 | 33 | 311 | 48 | 73 | 22 | 85 | 23 |
| 28 | 7 | 20 | 38 | 267 | 24 | 227 | 43 | 250 | 55 | 244 | 00 | 154 | 33 | 312 | 56 | 73 | 18 | 85 | 20 |
| | | | | | | | | | | | | ஸ்தம் | | | | | | | |
| 29 | 7 | 24 | 34 | 268 | 26 | 240 | 54 | 251 | 40 | 244 | 56 | 154 | 33 | 313 | 04 | 73 | 13 | 85 | 17 |
| 30 | 7 | 28 | 31 | 269 | 27 | 254 | 06 | 252 | 25 | 245 | 53 | 154 | 33 | 315 | 11 | 73 | 08 | 85 | 14 |

ஆகாயக் காட்சி:- 2உ பின் இரவு மணி 2-05க்கு சசிக்குத் தெற்கில் பா 1-48ல் புதனும், 5உ காலை ,, 6-38க்கு ,, ,, பா 0-13ல் சுக்ரனும், 15உ பின் இரவு ,, 1-58க்கு ,, ,, பா 0-58ல் சனியும், சந்திர சமாகமம்.

பிரவேசங்கள் முதலியன:—1உ காலை மணி 8-39க்கு தனுஸிற்கும், 30உ இரவு மணி 8-:2க்கு மகரத்திற்கும் ரவியும், 13உ பகல் மணி 2-10க்கு தனுஸிற்கு குஜனும், 16உ இரவு மணி 11 31க்கு கும்பத்திற்கு சுக்கிரனும், 17உ இரவு மணி 0-23க்கு விருச்சிகத்திற்கு வக்ரியாகவும்-21உ பகல் மணி 4-54கசு தனுஸிற்கு ரிஜுவாகவும் புதனும் பிரவேசிக்கின்றன. 3உ புதன் மேற்கில் வக்ராஸ்தமனம்; 20உ கிழக்கில் வக்ரோதயம், 30உ குஜன் கிழக்கில் உதயம், ஷை தேதி குரு வக்ராரம்பம், 9 தேதி முதல் "பாநுமத்யம்."

---

அயனும்சம் பா-22 கலை-57 விகலை 22·7740 கூட்ட சாயன ஸ்புடம் வரும்.

ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேது ஸ்புடம் வரும்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

தாரணஸு மார்கழிமீ" கலியுகாதி 5046, சாலிவாகனம் 1867
பசலி 1354, கொல்லமாண்டு 1120, ஹிஜிரா 1363-64
இங்கிலீஷ் 1944ஸு டிசம்பர்—1945ஸு ஜனவரிமீ"

| மார்கழி | டிஸம்பர் மீ | வாரம். | திதி. | நக்ஷத்ரம் | யோகம். | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | 15 | வெள் | ● 34-55 | கே32-58 | ம32-58அ | அமாவாசை |
| 2 | 16 | சனி | பிர34-12 | மூல34-09 | சித்60 | புஷ்ய சுத்தம் |
| 3 | 17 | ஞா | துதி33-01 | பூ34-01 | சி34-01அ | சந்திர தரிசனம் |
| 4 | 18 | திங் | திரு30-17 | உத்32-24 | ம32-24அ | மந்திரார்த்தங்கள் |
| 5 | 19 | செவ் | சது25-49 | திரு30-11 | சித்60 | மாஸ சதுர்த்தி விரதம் |
| 6 | 20 | புத | பஞ்21-03 | அவி26-59 | பி26-59சி | சஷ்டி விரதம், கரிநாள் |
| 7 | 21 | வியா | சஷ்16-12 | சத23-25 | ம23-25அ | மகராயனம் நா-57,வி-47 |
| 8 | 22 | வெள் | சப்10-15 | பூர19-50 | சித்60 | ஆராய்ச்சிகள் |
| 9 | 23 | சனி | அஷ்4-07 நவ58-49 | உட்15-37 | சி15-37பி | அவமாகம், கரிநாள், சுபம் விலக்க |
| 10 | 24 | ஞா | தச53-26 | ரே11-24 | அ11-24சி | தெய்வகதமான சுபகாரங்கள் |
| 11 | 25 | திங் | ஏ48-17 | அசு7-13 | சித்60 | சர்வ மத்வ ஏகாதசி-வைகுண்ட ஏகாதசி |
| 12 | 26 | செவ் | து43-12 | ப✽3-35 | சித்60 | கிருத்திகை விரதம் |
| 13 | 27 | புத | திர39-06 | கிரு1-10 ரோ59-23 | அ1-10சி | பிரதோஷம், அவமாகம் |
| 14 | 28 | வியா | சசி36-37 | மிரு58-11 | மர60 | இரவு நடராஜர் அபிஷேகம் |
| 15 | 29 | வெள் | ப○34-48 | திரு58-23 | சித்60 | ஆருத்ரா தரிசனம் |
| 16 | 30 | சனி | பிர33-41 | புன59-24 | சித்60 | வ-சரா |
| 17 | 31 | ஞா | துதி34-13 | பூச60-00 | சித்60 | |
| 18 | 1 | திங் | திரு35-01 | பூச2-24 | சித்60 | 1-தனு-சூ |
| 19 | 2 | செ | சது39-17 | ஆரி6-20 | சித்60 | 13-தனு-செ |
| 20 | 3 | புத | பஞ்43-11 | மக10-47 | சி10-47அ | 16-கும்-சுக் |
| 21 | 4 | வியா | சஷ்47-29 | பூர16-23 | சி16-23ம | 17-விரு-வ-பு |
| 22 | 5 | வெ | சப்52-46 | உத்22-12 | சி22-12அ | 21-தனு-ரீ-பு |
| 23 | 6 | சனி | அ58-50 | அஸ்28-51 | மர60 | சுக் 30-மகர-சூ |
| 24 | 7 | ஞா | நவ60-00 | சித்35-28 | சித்60 | |
| 25 | 8 | திங் | நவ3-37 | சு41-23 | அ41-23சி | பு கே சூ--செ குரு |
| 26 | 9 | செவ் | தச7-50 | வி45-35 | ம45-35சி | ஷடில ஏகாதசி |
| 27 | 10 | புத | ஏ10-42 | அ49-12 | சித்60 | வைஷ்ணவ ஏகாதசி |
| 28 | 11 | வியா | து-12-42 | கே51-36 | பி51-36சி | பிரதோஷம் |
| 29 | 12 | வெ | திர13-10 | மூல53-26 | அ53-29பி | மாஸ சிவராத்திரி, வித்யா நீலை தீர்த்த புண்ய தினம் |
| 30 | 13 | சனி | ச● 13-02 | பூ53-11 | சித்60 | அமாவாசை, போகி பண்டிகை |

(The second column is marked vertically "1945ஸு ஜனவரிமீ" beside rows 21–27.)

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET MADRAS,

# பூவுலக வாழ்க்கைக்கு இன்றியமையாத சிங்கபலத்தைத் தருவதெது?

முறையாய் செய்த அயக்காந்த செந்தூரத்தைக் காட்டிலும் தேகபலத்தைத் தரும் ஔடதம் வேறொன்றுமில்லை.




**விளம்பரம்.** இதைக் கண்ணுறும் கனவான்களே! இந்த லேகிய செந்தூரங்கள் சாமான்யமானவையல்ல. அபாரமான பலத்தைத் தரக்கூடிய சக்தி அமைந்துள்ளவை. உறுதியாய் இதை நம்பி வாங்கிச் சாப்பிட்டால் ஒரு தடவையிலேயே இவற்றின் குணம் நன்கு விளங்கும்.

தற்காலத்தில் மனிதரின் பால்ய சேஷ்டையாலும், இரத்தப் போக்காலும் அவர்க்கு உண்டான 20-வகை ரோகங்கள், சூலைரோகம், குன்மரோகம், பித்தபாண்டு, கை கால் முடக்கு, ஓடிவாய்வு, பித்த ஏப்பம், நெஞ்சி தொண்டை எரிச்சல், வயிற்றுப்பிசம், அஜீரணம், பசியில்லாமை, தாது ஹீனம், தேக உளைச்சல், கண்ணில் நீர்வடிதல், சோம்பல், நித்திரையில்லாமை, தலை சுழற்றல், நீர் இறங்கும்போது பொறுக்க முடியாத பாதையைத் தரும் தந்திமேகம் முதலியவைகள் ஆச்சரியப்படத்தக்க விதமாய் நீக்கிவிடும். பயங்கரமான மேக சம்பந்த வியாதிகளைப் பத்தே வேளையில் போக்கி சப்த நரம்புகளுக்கும் முருக்கேற்றி அபரிமிதமான இரத்த விருத்தியைப் பெருக்கிப் பலத்தைத் தருவதில் இதற்கு மிஞ்சின லேகிய பஸ்பம் வேறெங்குமில்லை என்று நாம் உறுதியாகச் சொல்வோம். இதல்லாமல் தேகத்தை புஷ்டியாக்கித் தேகத்தடிப்பு, நகக்கண் வெளுத்திருத்தல் முதலிய வியாதிகளைக் கண்டித்து, தினந்தோறும் பலத்தைத் தாராளமாய்ப் போக்குவதில் இந்த லேகிய செந்தூரங்களே முதன்மையானவை யென்பதே யாம் எமது அனுபவத்தில் கண்டிருக்கிறோம். நிற்க,

இந்த லேகிய செந்தூரங்கள், மேற்கண்ட வியாதிகளைக் கண்டிப்பாய் நிவர்த்திக்குமா என்னும் சந்தேகமுடையோர் பரீக்ஷார்த்தமாக முதலில் 48-நாளாவது வாங்கி யுண்டால் இவற்றின் அபாரகுணம் தெரியவரும். தவிர, யாங்கள் இம் மகத்துவம் பொருந்திய லேகிய செந்தூரங்களை எவ்வளவு சிறப்பித்துக் கூறியபோதிலும் அது தகும். மேலும் இவற்றை நோய் உள்ளவர்கள் தாம் சாப்பிடவேண்டும் என்ற அவசியமில்லை; யாவரும் சாப்பிடலாம். நோய் உள்ளவர்களைவிட நோய் இல்லாதவர்கள் எண்ணிக்கையாக 48-நாள் லேகிய செந்தூரங்களை யாதும் பத்தியமின்றிச் சாப்பிட அவர்க்கு நல்ல பலம் ஏற்படும்: இது தவறாது. இவற்றைத் தருவித்து நீங்கள் எண்ணிக்கையாக 10-நாளைக்குச் சாப்பிட்டால் அவற்றின் குணம் உங்களுக்கு நன்றாய்த் தெரியும்.

இந்த லேகிய செந்தூரங்களுக்குப் பத்தியமே கிடையாது. எந்தப் பண்டங்களையும் நீக்குதலின்றி மருந்து சாப்பிடும் காலத்தில் வயிற்றுக்குத் துரோகம் செய்யாமல் சாப்பிடலாம். இவற்றைச் சாப்பிடும்போது பசி அதிகமாய் எடுக்கும். ஆதலால் பச்சைப்பயற்றுக் குழம்பு தயிர், பால், கறி, மார்கண்ட சூப்பு. நெய் இவைகளை அதிகமாய்ப் பசியைத் தணிக்கக் கூடிய விதமாகத் தாமதம செய்யாமல் சாப்பிட்டு வரவேண்டியது. இவற்றைப் புசிக்கும்போ தெல்லாம் பலகாராதிகள் சாப்பிடல் வேண்டும். தயிர், பால், நெய், முதலியவைகள் எவைகளா யிருந்தாலும் சந்தேகமின்றிச் சாப்பிட்டு வரலாம்.

இந்தியா, ஸிலோன் ஆகிய உள்நாடுகளுக்கு 24-நாள் சாப்பிடக்கூடிய லேகியமும் செந்தூரமும் விலை ரூ. 1—12—0. போஸ்டேஜ் அணா 9. ஒரே தடவை 48-நாள் மருந்து வாங்குவோருக்கு தபாற்கூலி உள்பட ரூ. **4.**

ஸிலோனில் உள்ளோர் முழு தொகையையும் முன் பணமாக மணி ஆர்டர் அனுப்பி பெற்றுக் கொள்ளவும். முன் பணமின்றி வி. பி. யில் அனுப்பப்பட மாட்டா.

**விலாசம்:—லேகியம் டிபோ,**

**6,** வெங்கடேச மேஸ்திரி தெரு, மதராஸ்.

## கர்ணபிந்து



காதில் சீழ் வடிதல், காது குத்தல், காது கேளாதிருத்தல், காதில் நமைச்சல் முதலிய வியாதிகளுக்கு இந்த மருந்தில் 2-துளி காலை மாலைகளில் காதில் விட்டு வர, காதிலுள்ள நோய்களெல்லாம் நீங்கி விடும்.

புட்டி 1-க்கு அணா . **4** வி. பி. தபால்கூலி வேறு.

## (காட்லீவர் ஆயில்) மீன் எண்ணெய்

இது பலத்தை உண்டாக்குகிறது. தவிர இரும்பலினால் உண்டாகும் இளைப்பையும் அடக்கும். இளைத்தவர்கள் உபயோகித்தால் தேகம் புஷ்டியாகும், இரத்தத்தைச் சுத்தி செய்யும், சுவாசகாசங்களின் ரோகத்தை குணப்படுத்தும், சரீரத்தினுடைய ஒவ்வொரு பாகத்துக்கும் பலத்தைக் கொடுக்கும். இதைக் குழந்தைகளுக்கும் [illegible] புட்டி 1-க்கு விலை ரூபா **1—8—0.**

---

[illegible]

**தனலட்சுமி [illegible] 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்**

ஸ்ரீமான்-ஆரணி குப்புசாமி முதலியார் எழுதியது

## அம்பாலிகை அல்லது அதிசய மரணம்

இதில் துப்பறியும் ஆனந்தசிங் வெற்றிமாலை சூடி தான் அமிர்தம்மாள் என்னும் கன்னிகையை மணம் செய்து கொண்டு மேலும் பிரக்யாதி அடைவது படிக்கப் படிக்க அறிவை வளர்க்கும் என்பது நிச்சயம். விலை அணா 12

## பூங்கோதை

இது மிக்க ஆச்சரியத்தை விளைவிக்கும் ஒரு நாவல். குழந்தைப் பருவத்தில் ஜலத்தில் முழுகி இறந்து போனதாகக் கருதப்பட்ட ஒருவன் பல வருடங்களுக்குப் பின் தோன்றித் தன் தந்தையின் திரண்ட ஆஸ்தியைப் பெறுகிறான். இதன் விலை அணா 10.

## சுவர்ணம்பாள்

இதில் துப்பறிபவன் கதவில் பட்டிருந்த ஒரு பெருவிரல் குறியின் அடையாளத்தைக் கொண்டு குற்றவாளியைக் கண்டுபிடித்த சூக்ஷ்ம அறிவும், சாமர்த்தியமும் தைரியமும் நன்றாய் விளங்கும். விலை அணா 12.

## லோகநாயகி

பண ஆசை எத்தகைய பெரும் பாதகத்தையும் செய்யத் தூண்டும் கொடிய பேய் என்பதும், அக்கிரமஸ்தரும், நம்பினவர்களைத் துரோகம் செய்யும் பாதகரும் முடிவில் ஆண்டவனால் எப்படியும் தண்டிக்கப்படுவார்கள் என்பதை இக்கதையில் நன்கு நிரூபித்திருப்பதால் வியப்பையும் உற்சாகத்தையும் அளிக்கும். விலை ரூ. 1.

## கற்கோட்டை

இதில் தேசப் பிரஷ்டமடைந்த சில உயர்குல மகுடவர்த்தனர்கள் தலைமறைந்து வசிக்கும்போது, நெஞ்சு திடுக்கிடும் பிராணபத்துகளில் சிக்கிக்கொள்வதும், அவற்றினின்று தப்பித்துக்கொள்ள அவர்கள் செய்யும் வீர தீர சாமர்த்தியச் செயல்களும், சொல்லொணா வியப்பையும் சோகத்தையும் வீரரசத்தையும் காட்டும். சில ஸ்திரீகளின் அற்புத நடக்கைகளும்; துணிகரமான தீரச்செயல்களும், தம் காதலரிடத்தில் மெய்க்காதல் கொண்ட உத்தம ஸ்திரீகள் தம் காதலர் பொருட்டாய் எவ்வளவு வரையில் ஆடவருக்குச் சமமாய் நடந்துகொள்ளச் சக்தி யுடையவர்களா யிருக்கிறார்களென்பதும் இக் கதையால் நன்கு விளங்கும்.

விலை ரூபா 2—8—0

## கற்பகச் சோலையின் அற்புதக் கொலை

இது இரும்பைக் காந்தம் இழுக்கின்றவாறு போல் படிப்பவனின் மனதை இழுத்து எல்லோருக்கும் ஆனந்தத்தையும் அற்புதத்தையும் உண்டாக்கத் தக்கது.

இதன் விலை ரூபா 1—8—0.

---

ஆனந்தபோதினி காரியாலயம், சௌகார்பேட்டை, சென்னை.